# இலக்கண ஆய்வு

## வினைச்சொல்



டாக்டர் மோ. இசரயேல், எம். ஏ., பிஎச். டி.,
டிப். மொழியியல், ஜெர்மனி,
தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக்கழகம்









விற்பனை உரிமை :
பப்ளிஷிங் ஹவுஸ்,
69, பாண்டிய வேளாளர் தெரு, மதுரை-625001.

சிந்தாமணி வெளியீடு

முதற் பதிப்பு: மே, 1976



புத்தகம் கிடைக்குமிடம்:


மதுரை பப்ளிஷிங் ஹவுஸ்,
69, பாண்டிய வேளாளர் தெரு,
மதுரை-625001.
தொலைபேசி: 31795




விலை ரு. 5-00

அச்சிட்டோர்:

சங்கம் பிரிண்டர்ஸ், மதுரை-625001.

# நூன்முகவாயில்

இந்நூல் ஏறத்தாழ பன்னிரண்டு ஆண்டுகளாக அவ்வப்போது எழுதி வெளியிட்ட சில கட்டுரைகளின் தொகுப்பேயாகும். இவ்வாய்வுக் கட்டுரைகள் தொல்காப்பிய, நன்னூல் இலக்கணச் செய்திகளுக்குத் தெளிவும் விளக்கமும் எளிமையும் தரும் குறிக்கோளுடன் எழுதப்பட்டன. இக்கால மொழியியற் கொள்கைகளில் ஏற்பட்டுள்ள தெளிவும் இக்கட்டுரைச் செய்திகளுக்கு வடிவம் கொடுக்கத் துணி புரிந்துள்ளது. எனவே இவை ஆய்வாளர்களுக்கும் முதுகலை மாணவர்களுக்கும் பெரிதும் பயன்படும் என்ற நோக்கில் நூல்வடிவில் வெளியிடப்படுகின்றன. சில கருத்துக்கள் ஆசிரியரின் முன்னைய வெளியீட்டில் இடம் பெற்றிருப்பதினின்று வேறுபட்டுள்ளது. இது தொடர்ந்து நிகழும் ஆராய்ச்சியின் விளைவேயாகும்.

ஆய்வுக்கட்டுரை ஒன்றில் வந்த செய்தி தொடர்பின் அடிப்படையில் மீண்டும் பிற கட்டுரையில் இடம் பெறலாம். இவ்வியல்பே இந்நூல் ஒரு கட்டுரைத் தொகுப்பு என்பதனை மேலும் வலியுறுத்துகின்றது.

இக்கட்டுரைகளைத் திங்கள் இதழ்களில் வெளியிட்டு உதவிய தமிழ்ப் பொழில், செந்தமிழ், தென்மொழி ஆகியவற்றின் ஆசிரியப் பெருமக்களுக்கும், இவை நூல் வடிவில் அச்சேறுங்கால் படிகளைத் திருத்த உதவிய என் மாணவ நண்பர்கள் திருவாளர் தி. நடராசன், சு. வேங்கடராமன், இரா. மோகன் ஆகியோருக்கும் என் உள்ளங்கனிந்த நன்றி. இதனை நன்முறையில் அச்சிட்டு அளித்த சங்கம் அச்சக உரிமையாளர் திரு. வெ. பாலகிருஷ்ணன் அவர்களுக்கு என் நன்றி. இந்நூலின் விற்பனை உரிமையை ஏற்றுள்ள மதுரை பப்ளிஷிங் ஹவுஸிற்கு என் நன்றி.

## ஆசிரியரின் பிறநூல்கள்

1. The Treatment of Morphology in Tolkāppiyam

2. A Grammar and Dictionary of the Kuvi Language
(Ready for the press)

3. இலக்கண ஆய்வு — பெயர்ச்சொல்
(அண்மையில் வெளிவர உள்ளது)

# பொருளடக்கம்

# வினைச்சொல் இலக்கணம், அமைப்பு, வகைகள்

## இலக்கணம்

தமிழில் இலக்கண நூலார் பெயர், வினை ஆகிய இருவகைச் சொற்களுக்கே சிறப்பிடம் தந்துள்ளனர்; இடை, உரி ஆகிய சொற்களுக்கு இரண்டாம் நிலையினையே தந்துள்ளனர். தொல்காப்பியனார்,

சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப அறிந்திசி னோரே
(தொ.சொ. 158)

அவற்றின் சிறப்பு நோக்கியே 'இரண்டென்ப' என எண் குறித்துச் சுட்டியுள்ளார். நன்னூலாரும் 'பெயர்வினை என விரண் டாகு மிடையுரி யடுத்து' (நன். 270) என்று கூறுவது இதனை வலியுறுத்துகின்றது.

தொல்காப்பியனார் பெயர் வினைகளுக்கு, அமைப்பின் (structure) அடிப்படையிலேயே இலக்கணம் கூறியுள்ளார். வேற்றுமையியலில் அவர்,

பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழில்நிலை யொட்டு மொன்றலங் கடையே
(தொ.சொ. 70)

என்று பெயரின் இலக்கணமும், வினையியலில்

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங்காலைக் காலமொடு தோன்றும்
(தொ.சொ. 168)

என்று வினையின் இலக்கணமும் கூறி இருப்பது கருதத்தக்கது.

அவர் பெயர்ச்சொல் காலங் காட்டாது; வேற்றுமை ஏற்கும் (தொ. எ. 116; தொ. சொ. 65, 69) என்கின்றார். இதற்கு மாறாக வினைச்சொல் வேற்றுமை உருபனை ஏலாது; ஆனால் காலக்குறியிட்டினோடு (Tense marker) வரும் என்பதே அவர் வினைக்குக் கூறிய இலக்கணம். ஆனால் பிற்காலத்தில் நன்னூலார்

செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொரு ளாறும் தருவது வினையே
(நன். 320)

என்னும் நூற்பாவில் பொருள் அடிப்படையில் வினைக்கு இலக்கணம் கூறியுள்ளார். வேற்றுமை மயங்கியலில்

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி யென்றா
இன்னதற் கிதுபய னாக வென்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முதன் நிலையே
(தொ.சொ.112)

எனத் தொழிலது முதனிலைகள் எட்டு எனத் தொல்காப்பியனார் கூறியுள்ளமையே நன்னூலார்க்கு வினை இலக்கணம் கூறும் செய்தியின் அடிப்படையாக அமைந்திருத்தல் வேண்டும். வேற்றுமை மயக்கம் கூறும்பகுதியில் தொல்காப்பியனார் அதை வினை இலக்கணமாகக் கூறாமல் வினையடிப்படையில் அமையும் வேறுபட்ட வேற்றுமைப் பொருள் தோன்றுதற்கு ஏதுக்களைச் சுட்டுதற் பொருட்டே [1] கூறியுள்ளார்.

---

1. வினைத்தொடர்பின் அடிப்படையில் வேற்றுமை தோன்றுதலும் வினை உணர்த்தும் வேறுபட்ட பொருட்களும் வேற்றுமை மயக்கத்திற்குக் காரணங்களாக அமைகின்றன என்பதை இந்நூற்பாவின் செய்தி வலியுறுத்துகின்றது.

(குடம்) வனைந்தான் என்னும் வினைச்சொல் வினை-வனைதல்; செய்வது-கருத்தா; செயப்படுபொருள்-குடம்; நிலன்-வனையும் இடமாகிய நிலன்; காலம்-தொழில் நிகழும் காலம்; கருவி-திகிரி முதலாயின; பயன்-வனையப்பட்ட குடத்தைக் கொள்ளுதல் ஆகிய எட்டினையும் உணர்த்தும் வகையில் நிகழும்.

மேலும் தொடர்நிலையில், தொல்காப்பியனார் பெயர்ச் சொற்கள் ஏற்கின்ற பயனிலைகளைக் கூறுங்கால்

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே

(தொ.சொ.66)

என்னும் நூற்பாவில் பெயர்ப் பயனிலைகளைத் தொகுத்துள்ளார்.

| | |
|---|---|
| பொருண்மை சுட்டல் | ஆ உண்டு |
| வியங்கொள வருதல் | ஆ வாழ்க |
| வினைநிலையுரைத்தல் | ஆ கிடந்தது |
| வினாவிற்கேற்றல் | அது யாது? |
| பண்புகொள வருதல் | ஆ கரிது |
| பெயர்கொள வருதல் | ஆ பல |

இங்கு, வினையும் பெயரும் பயனிலையாக வருதல் சுட்டப்படுகின்றது. ஆனால் பெயர் எழுவாயாக வருதலைத் தொல்காப்பியனார் (தொ.சொ.65) கூறியுள்ளார். வினை எழுவாயாக வருதல் இல்லை. எனவே வினை பயனிலையாகவே வரும். ஆனால் பெயர் எழுவாயாக மட்டுமன்றிப் பயனிலையாகவும் செயலாற்றும்.

இரண்டாம் வேற்றுமைப் பொருளை விளக்குங்கால் தொல்காப்பியனார்,

இரண்டாகுவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பே
அவ்விரு முதலில் தோன்றும் அதுவே
(தொ.சொ.61)

என்னும் நூற்பாவில் வினையும் வினைக்குறிப்பும் செயப்படு-பொருளை ஏற்று வரும் எனச் சுட்டியுள்ளார். இதினின்று செயப்படுபொருள் குன்றா வினைகள் (Transitive Verbs) செயப்படுபொருளை ஏற்று வருதல் பெறப்படுகின்றது.

எ-டு. குடத்தை வனைந்தான்
வீட்டைக் கட்டினான்
நிலத்தை உழுதான்
குழையை உடையன்.

எச்சவியலில், தொல்காப்பியனார்

வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே.
(தொ. சொ. 432)

என்னும் நூற்பாவில் வினைச்சொல் வினையெச்சத்தால் தழுவப்-படும் என்கின்றார்.

எ-டு. உழுது வந்தான் ; சென்று உண்டு உறங்கினான்.
வந்து இலன் ; படித்துச் சென்றான்.

வினைச்சொல் வினையடைகளாலும் (adverbs) தழுவப்-படுதல் மொழிவழக்கில் காணப்படுவதாகும்.

எ-டு. அங்குச் சென்றான்
இனி வருவான்

எனவே வினைச்சொல் இலக்கணத்தை வேற்றுமை ஏலாது; காலங் காட்டும் எனலாம். மேலும் வினைமுற்று,

தொடர்நிலையில் பயனிலையாகவே வரும். வினையெச்சத்தாலும், வினையடையாலும் தழுவப்படும். செயப்படுபொருள் குன்றா வினைகள் செயப்படுபொருளைத் தாங்கி நிற்றல் இயலும். பெரும்பாலான வினையடிகள் ஒருமை ஏவலாகச் செயலாற்றும்.[2]

அமைப்பு

தொல்காப்பியனார் வினையியலில் வினைச்சொல் விகுதிகளைப் பாகுபாடு செய்து தந்துள்ளார் (தொ.சொ. 202-207; 216-217). கிளவியாக்கத்தில் வினையிற்றோன்றும் பாலறி கிளவிகளையும் (தொ. சொ. 11) பகுத்துக் கூறியுள்ளார்.[3]

வினையியலில்

அன்ஆன் அள்ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே (தொ. சொ. 205)

---

2. இதனை,
செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே
(தொ.சொ.450)

என்னும் நூற்பாவில் தொல்காப்பியனாரும்,
நடவா மடிசீ விடுகூ வேவை
...................................
...................................
...................................
செய்யெ னேவல் வினைப்பகாப் பதமே
(நன். 137)

என நன்னூலாரும் கூறியுள்ளமை அறியத்தக்கது.

3. பெரும்பாலான வினைச்சொற்கள் திணை-பால், எண் விகுதிகளை ஏற்று வரும். எனவேதான் தொல்காப்பியனார்,
இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய
ஈற்றில் நின்றிசைக்கும் பதினோ ரெழுத்தும்
தோற்றம் தாமே வினையொடு வருமே
(தொ.சொ.10)

என்று கூறியுள்ளார். (ஒ.பா: தொ.சொ. 5-9,202-207, 216,217)

என்று கூறிய தொல்காப்பியனார்

னஃகான் ஒற்றே ஆடூஉ வறிசொல் (தொ.சொ.5)

ளஃகான் ஒற்றே மகடூஉ வறிசொல் (தொ.சொ.6)

என்று கிளவியாக்கத்தில் பாலறி கிளவிகளை மட்டும் கூறியுள்ளமையால் அன், ஆன், அள், ஆள் என்னும் விகுதிகளில் உள்ள அ, ஆ என்னும் படர்க்கைக் குறியீட்டினைப் (Third person marker) பிரித்துக்காண வழி வகுத்துள்ளார்.

மேலும்

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே
(தொ.சொ. 450)

என்னும் நூற்பாவில் 'செய்யாய்' என்னும் முன்னிலை வினைச்சொல் 'செய்' என்னும் வினையடி அமைப்பில் வழங்குதலைச் சுட்டி உள்ளார். நன்னூலார், பதவியலில்

பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்
(நன்.133)

என்னும் நூற்பாவின்கண் வினைச்சொற்களின் உறுப்புக்களைத் தொகுத்து, நட வா மடி சீ விடு கூ வே வை (நன். 137) என்று தொடங்கும் நூற்பாவில் வினையடிகளைக் குறிப்பிட்டு, பின்னர் பிறவினை அமைப்புக்களைக் கூறி (நன்.138, 139), அன் ஆன், அள், ஆள் .......... என்று தொடங்கும் நூற்பாவில் (நன்.140) வினை விகுதிகளைத் தொகுத்து[4], தொடர்ந்து வினைகளில் அமையும் காலம் காட்டும் இடைநிலைகளையும் விகுதிகளையும் சில நூற்பாக்களில் (நன். 142-145) குறிப்பிட்டிருத்தலும், பதவியலில் விகுதிப் புணர்ச்சியில் சாரியை வருதலைச் சுட்டி-

4. நன்னூலார் வினையியலில் வினைவிகுதிகளை வகுத்துத் தொகுத்துக் கூறி உள்ளார் (நன். 325-337).

யிருத்தலும் வினைச்சொல்லின் உள்ளமைப்பினை விளக்கும் வகையில் அமைகின்றன.

முற்றுவினையின் அடிப்படையில் தமிழ் வினைச்சொல் அமைப்பினை ஆய்ந்தால் அது பின்வரும் உறுப்புக்களை உடையதாக அமைகின்றது.

| வினையடி + | பிற வினைக் குறியீடு + | செயப்படு பொருள் குன்றா வினைக் குறியீடு + | காலக் குறியீடு + | (சாரியை) + | இடக் குறியீடு + | திணை-பால்-எண் குறியீடு |
|---|---|---|---|---|---|---|
| உண் | | | ட் | | ஆ | ன் |
| கண் | | | ட் | அன் | அ | ள் |
| செய் | வி | த் | த் | அன் | அ | ன் |
| உடை | | த் | த் | | ஆ | ன் |
| போ | | கு | இன் | | ஆ | ன் |
| நட | பி | த் | த் | | ஆ | ர் |

வினையடி (verbal stem) இது ஏவல் ஒருமையாக வழங்கும். பிறவினை (causative) வி, பி என்பன பிறவினைக் குறியீடுகளாக அமைகின்றன.

செயப்படுபொருள் குன்றிய-குன்றா வினை வேறுபாடு (Intransitive - transitive distinction)

இவ்வேறுபாடு தெளிவாகச் சில வினைகளில் காணப்படுகின்றது.

எ-டு. உடைந்தது-உடைத்தது

சேர்ந்தான்-சேர்த்தான்.

சில வினையடிகள் இயல்பாகவே செயப்படுபொருள் குன்றா நிலையினை உடையவை. எ-டு. தின், உண், செய் முதலியன.

சில வினையடிகள் அடிப்படையில் செயப்படுபொருள் குன்றிய நிலையின் உள்ளன. எ-டு. வா, போ, செல், அழு, ஓடு முதலியன.

வேறு சில வினையடிகள் இரண்டிற்கும் பொதுவானவை-களாக அமைகின்றன. எ-டு. சேர், அடை, உடை, ஒடி முதலியன.

போ - போக்கு, பாய் - பாய்ச்சு, உருள் - உருட்டு, நட - நடத்து, எழு - எழுப்பு, பயில் - பயிற்று போன்றவற்றில் கு, சு, டு, து, பு, று என்ற குறியீடுகள் செயப்படுபொருள் குன்றா-பிறவினைக் குறியீடுகள் (Transitive-Causative markers) ஆகச் செயலாற்றுகின்றன.

காலக் குறியீடு **(Tense marker)**

தொல்காப்பியனார் 'காலந் தாமே மூன்றென மொழிப, (தொ. சொ. 199) என்று குறிப்பிட்டாலும் கால உருபன்களைப் பகுத்துக் கூறவில்லை. நன்னூலார் த்,ட்,ற், இன் ஆகியவற்-றை இறந்தகாலக் குறியீடுகளாகவும், கிறு, கின்று, ஆநின்று ஆகியவற்றை நிகழ்காலக் குறியீடுகளாகவும், ப், வ் ஆகிய-வற்றை எதிர்காலக் குறியீடுகளாகவும் பகுத்துக் காட்டியுள்ளார் (நன். 143 - 144). போயது, ஓடியது, போய், ஆய் போன்ற சொற்களில் யகரமும், சொன்னது, தின்னது போன்றவற்றில் னகரமும், இட்டான், புக்கான், பெற்றான் போன்ற சொற்களில் வினையடியின் ஒற்று இரட்டித்தும் இறந்த காலங்காட்டுதலும் இங்குக் கருதத்தக்கது.

செய்யாநின்றான், உண்ணாகிடந்தான் போன்றவற்றில் நில், கிட போன்ற துணைவினைகளின் ஆட்சியால் இறந்த கால வினைகளே காலத் தொடர்ச்சியைச் சுட்டி நிகழ்காலம் உணர்த்-தலாயின.

சாரியை

நன்னூலார் கால இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையில் வரும் பொருளற்ற உறுப்பைச் சாரியை (நன். 133, 243, 244)

எனப் பெயர் கூறி உள்ளார். இது பொருளற்ற வெற்றுருபாக (empty morph) ஆக அமைகின்றது எனலாம்.

எ-டு. உண் — ட் — அன் — அ

## இடக்குறியீடு (Person marker)

தொல்காப்பியக் கிளவியாக்கத்தில் வினையீறு (பாலறி-கிளவி, தொ. சொ. 11) பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளையும் (தொ.சொ. 5-9) வினையியலில் அமையும் விகுதி பற்றிய செய்திகளையும் (தொ. சொ. 202 - 207; 216, 217) ஒப்பிட்டு ஆயும்போது ஆசிரியர் வினைமுற்றுக்களில் இடக்குறியீட்டினைப் பாகுபடுத்திக் காண இடந்தருகின்ருர் என அறியலாம்.

## எண்-பால் குறியீடு (Number-Gender Marker)

வினைச்சொற்களில் எண்-பால் குறியீடுகள் தன்மை முன்-னிலையில் எண்வேறுபாடு மட்டும் உணர்த்துவனவாகவும் படர்க்கையில் திணை-பால்-எண் வேறுபாடு உணர்த்துவனவா-கவும் அமைகின்றன.

| | | |
|---|---|---|
| எ-டு. | உண்—ட்—ஏ—ன் | —ன் ஒருமை |
| | உண்—ட்—ஓ—ம் | – ம் பன்மை |
| | சென்—ற்—அன்—இ—ர் | —ர் பன்மை |
| | கண்—ட்—ஆ—ன் | —ன் ஆண்பால் ஒருமை (உயர்திணை) |
| | ஓடு—இன்—அ—ள் | —ள் பெண்பால் ஒருமை (உயர்திணை) |
| | எய்து—இன்—அ—ர் | —ர் பலர்பால் பன்மை (உயர்திணை) |
| | ஆகு—இன்—று | —று ஒன்றன்பால் (அஃறிணை) |
| | ஆடு—இன்—அ | ...ல் (அஃறிணை) |



வினைச்சொற்கள் எதிர்மறை வேறுபாட்டுடன் அமைதலும் உண்டு. அப்பொழுது அவை பெரும்பாலும் காலக்குறியீட்டினை ஏற்பதில்லை.

| | | |
|---|---|---|
| எ-டு. | உண்ணுன் | உண்-ஆ-(அ)-ன் |
| | செய்யா | செய்-ஆ-(அ) |
| | கூருர் | கூறு-ஆ-(அ)-ர் |

வினைச்சொற்பாகுபாடு

தொல்காப்பியனுர் வினைச்சொற்களை வினை, குறிப்பு என்று வேறுபடுத்துவதோடு அமையாது (தொ.சொ.201), உயர்திணைக்குரிமையும், அஃறிணைக்குரிமையும் ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும் (தொ.சொ.201) ஆகிய மூவகைகளாகப் பாகுபடுத்தி அவற்றின் இயல்புகளைக் கூறிச் செல்லுகின்ருர். அவர் தன்மை, படர்க்கை ஆண்பால், பெண்பால், பலர்பால் வினைகளை உயர்திணைக்குரியனவாகவும், படர்க்கை ஒன்றன்பால், பலவின்பால் வினைகளை அஃறிணைக்குரியனவாகவும் ஏனைய வினைகளை இரு திணைப் பொதுமையுடையனவாகவும் கொள்ளுகின்ருர். நன்னூலார் வினை, குறிப்பு (நன். 320, 321) ஆகிய இருவகை வினைகளுக்கு இலக்கணங்கூறியும் வினையினை முற்று, எச்சம் என்ற அடிப்படையில் பாகுபாடு செய்தும் (நன். 322, 323) தொடர்ந்து இடம், பால் அடிப்படையில் அவற்றின் விகுதிகளை வேறுபடச் சுட்டி (நன்.325-329), இறுதியில் இருதிணைப் பொது வினைகளைத் தொகுத்துத் (நன்.330), தொடர்ந்து அவற்றிற்கு விளக்கம் தருகிருர் (நன்.331-346).

விரவுவினை (இருதிணைப் பொதுவினை)

தொல்காப்பியனுரும் நன்னூலாரும் இருதிணைப் பொது வினைகளைத் தொகுத்துத் தனி ஒவ்வொரு நூற்பாவில் கூறி உள்ளனர். (தொ.சொ.222, நன்.330). தொல்காப்பியனுர் எண்வகைப் பொதுவினைகளையும் நன்னூலார் ஏழுவகைகளையும் கூறுகின்ருர். தன்மை வினைகளைத் தொல்காப்பியனுர்உயர்-

திணைவினை எனக்கொள்ள (தொ.சொ.202, 20.) நன்னூலார் விரவு வினையாகக் கொள்ளுகின்ருர். நன்னூலார் குறிப்பிடும் உண்டு என்னும் சொல்லும் தொல்காப்பியனுர் காலத்தில் பொதுவினையன்று போலும். நன்னூலார் 'செய்மன' என்ற சொல்லையும் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றினையும் பொதுவினைப் பட்டியலில் சேர்த்துக் கொள்ளவில்லை. 'செய்மன' என்னும் வாய்பாட்டுச்சொல் அவர் காலத்தில் முற்றிலும் வழக்கிறந்து விட்டது போலும். எனவே முன்னிலை, வியங்கோள், வேறு, இன்மை செப்பல் (இல்லை), வினையெஞ்சு கிளவி, பெயரெஞ்சுகிளவி ஆகியவை இருவராலும் பொதுவினைகளாகக் கொள்ளப்பட்டவைகளாகும்.

மேலும் தொல்காப்பியனுர் முன்னிலையில் 'மின்' விகுதியைக் கூறி இருப்பினும் (தொ.சொ. 224) அதனை ஏவலுக்குரியது என்று கூறவில்லை. நன்னூலார் 'மின் அவற்றேவல்' (நன். 337) என்று வேறுபடுத்திக் கூறியுள்ளார். தொல்காப்பியனுர் வியங்கோள் பற்றி 'முன்னிலை தன்மை ஆயீரிடத்தொடும் மன்னுதாகும்' (தொ.சொ. 226) என்று குறிப்பிட, நன்னூலார்

கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப (நன். 338)

என்று கூறி வியங்கோளினை ஐம்பால் மூவிடங்களுக்கு உரியதாக்கி அதன் விகுதிகளையும் (க, ய, ர்) வகுத்துக்காட்டியுள்ளார்.[5] முன்னிலை ஏவல் வினைமுற்று விகுதிகளைக் குறிப்பிடும் நூற்பாவில் நன்னூலார் 'ஏவலின் வருஉம் எல்லா வீற்றவும்' (நன். 335) என்னும் தொடரால் 'நட வா மடி சீ.........' என்று தொடங்கும் நூற்பாவில் (நன்.137) சொல்லப்படும் ஈறுகளையும் முன்னிலை ஈறுகளாகக் கொள்ளுகிருர். மேலும் அவர் முன்னிலை விகுதிகளைக் குறிப்பிடும் நூற்பாவினைத் தொடர்ந்து,

5. தொ. எ. 211

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே (நன். 338)

என்னும் நூற்பாவினை அமைத்து, ஈகாரம், ஏகாரம் ஆகிய இரண்டும் முன்னிலை ஒருமையில் விகுதிகளாக வரும் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். தொல்காப்பியனார் இதே நூற்பாவினை எச்சவியலில் (தொ. சொ. 451) அமைத்துள்ளது இங்குக் கருதத்தக்கது.

எச்சம்

இலக்கண நூலார் எச்ச வினைகளை வினையெச்சம், பெயரெச்சம் என இரு வகைகளாகப் பகுப்பர் (தொ. சொ. 222, 239; நன். 330). இவ்வெச்சங்கள் இலக்கண நூலாரால் இருதிணைப் பொதுவினைகளாகக் கொள்ளப்படுகின்றன. எச்சங்களின் அமைப்புக்களை அவர்கள் வாய்ப்பாட்டு (pattern) முறையால் குறித்துள்ளனர்.

வினையெச்சம்

தொல்காப்பியனார் வினையெஞ்சு கிளவிக்கு ஒன்பது வகையான வாய்பாடுகளைத் தந்துள்ளார் (தொ. சொ. 228). மேலும் அவர் பின், முன், கால், கடை, வழி, இடத்து என்று அறுவகை வினையெச்ச (வினையடை) ஈறுகளையும் தொகுத்துள்ளார் (தொ. சொ. 229). வந்தபின், வராமுன், செய்தக்கால், உண்ணுக்கடை, வந்தவழி, வந்தவிடத்து போன்ற வழக்குகளில் அமையும் இவ்வீறுகள் யாவும் வினையடைப் பெயர்களே.[6] எனவே அத்தொடர்கள் அமைப்பில் பெயரெச்சத் தொடர்களாக நின்று, பயன்வகையில் வினையடைகளாகச் செயலாற்றுகின்றன.[7] நன்னூலார் வினையெச்சத்தின் ஒன்பது வாய்பாடுகளையும், வான், பான், பாக்கு என்னும் மூன்று வினையெச்ச ஈறுகளையும் வினை-

---

6. இசரயேல், மோ., வினையடைப்பெயர்கள், தமிழ்ப் (1975), பக். 169-175.

7. Israel, M., The Treatment of Morphology in Tolkappiyam, 1973, pp. 219-220.

யெச்சங்களாகத் தொகுத்துள்ளார் (நன். 343). வான், பான் ஈற்று வினையெச்சங்களாகச் செல்வான், உண்பான் போன்ற முற்றெச்சங்கள் மொழியில் ஏற்பட்ட வளர்ச்சியால் பிற்காலத்தில் தோன்றியவைகளே.

செய்து, செய்பு, செய்யூ, செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர் என்னும் எண்வகை வாய்ப்பாடுகளையும் தொல்காப்பியனாரும் நன்னூலாரும் கூறி உள்ளனர் (தொ. சொ. 228; நன். 343). வினையெச்சங்களைத் தொகுத்த நூற்பாவில் தொல்காப்பியனார் சேர்க்காத செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தினை நன்னூலார் சேர்த்துள்ளார். தொல்காப்பியனார் இதனை எழுத்ததிகாரத்தில் ஆகார வீற்றுப் புணர்ச்சியினைக் கூறுங்கால் குறிப்பிட்டிருப்பது (தொ. சொ. 222) இவண் நோக்கத்தக்கது. தொல்காப்பியனார் 'செயற்கென' என்னும் ஒரு வாய்பாட்டு வினையெச்சத்தினைத் தந்துள்ளார். இதனைத் தொழிற் பெயர் நான்காம் வேற்றுமை உருபாகிய குகரத்துடன் இணைந்துள்ள அமைப்பு என்று கொள்ளலாம் (செயல்-கு). நன்னூலார் இதனைக் குறிப்பிடவில்லை.

தொல்காப்பியனார் வினைகளின் காலமயக்கம் கூறுங்கால் 'செய்தென் எச்சத் திறந்த காலம்' (தொ. சொ. 239) என்று சுட்டி இருப்பினும் அவர் வினையெச்சங்கள் காலம் உணர்த்துதலை வரையறுத்துக் கூறவில்லை. ஆனால் நன்னூலார் 'ஐந்தொன் றாறும் முக்காலமும் முறைமை தரும்' (நன். 343) என்று குறிப்பிட்டு, செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென என்பன இறந்த காலத்தையும், செய என்பது நிகழ்காலத்தையும், செயின், செய்யிய, செய்யியர், வான், பான், பாக்கு என்பன எதிர்காலத்தையும் உணர்த்தும் என வினையெச்சங்களின் காலத்தினை வரையறுத்துக் கூறி உள்ளார்.

பெயரெச்சம்

தொல்காப்பியனார் செய்த, செய்யும் (தொ. சொ. 223; 224) என்னும் இருவகை வாய்பாடுகளையே பெயரெச்சத்திற்குத் தந்துள்ளார். ஆனால் நன்னூலார் 'செய்த செய்கின்ற

செய்யுமென் பாட்டில்' (நன். 340) என்னும் மூவகை வாய்பாடுகளைத் தந்துள்ளார். இது காலப்போக்கில் ஏற்பட்டுள்ள மொழிவளர்ச்சியைக் காட்டுகின்றது.

வினையெச்சங்கள், பெயரெச்சங்களின் முடிக்கும் சொற்கள் பற்றிய செய்திகள் இலக்கண நூலாரால் பல நூற்பாக்களில் கூறப்பட்டுள்ளன (தொ. சொ. 230-233, 236, நன். 344, 345, 354).

குறிப்புவினையெச்சம், குறிப்புப்பெயரெச்சம் என்ற சொல் வழக்குகள் பிற்காலத்தில் ஏற்பட்டவைகளே. தொல்காப்பியத்தில் அப்பெயர்கள் ஆளப்படவில்லை. அவற்றின் இலக்கணம் கூறப்படவும் இல்லை. நன்னூலார் அவ்வகைகளுக்கு ஓரளவு இடந்தருகின்றார் (நன். 322).

முற்றும் எச்சமும்

பொருள் முற்றுப் பெற்று நிற்கும் வினைச்சொல்லை முற்று என்றும் பொருள் எஞ்சி நிற்கும் வினைச்சொல்லை எச்சம் என்றும் இலக்கண மரபில் வழங்குவர். தொல்காப்பியனார் எச்சத்தினை 'எஞ்சு கிளவி' என்ற பெயரால் அழைப்பர் (தொ. சொ. 222, 228, 231). எச்சம் தான் குறைந்து நிற்றல் மட்டுமன்றி, தான் அவாவி ஏற்று முடிய நிற்கும் பெயர் அல்லது வினை எஞ்ச நிற்கின்றது. அது தன்னில் திணை-பால்-எண், இடம் உணர்த்தும் உறுப்புக்கள் குறைய நிற்கின்றது. பெரும்பாலான வினைமுற்றுக்களில் இவ்வுறுப்புக்கள் அமையும். எச்சங்கள் பெரும்பாலும் திணை-பால்-எண், இட வேறுபாடுகளைக் காட்டுவதில்லை (முற்றெச்சம் தவிர. தொ.சொ.457, நன்.351 ) எனவே தான் எச்சங்கள் இருதிணைப் பொதுவினை (விரவு வினை)களாக இலக்கண நூலாரால் தொகுக்கப்பட்டுள்ளன.

| வினைமுற்று | எச்சம் | |
|---|---|---|
| வந்தேன் | வந்த தம்பி | வந்து சென்றேன் |
| வந்தாய் | வந்த நாய் | வந்து சென்றாய் |
| வந்தான் | வந்த மக்கள் | வந்து சென்றான் |
| வந்தது | வந்த மாடுகள் | வந்து செல்லும் |

அமைப்பில் வினைமுற்று முன்னர்க் கூறப்பட்ட பல உறுப்புக்களையும் ஏற்று வர, எச்சம் வினையடி, காலக்குறியீடு, எச்ச விகுதி அல்லது வினையடி, எச்ச விகுதி ஆகியவற்றை மட்டும் ஏற்று வருகின்றது.

எ-டு. செய்-த்-அ, செய்-உம்
செய்-த்-உ, செய்-அ

தொடர்நிலையில் வினைமுற்று பயனிலையாகவே செயலாற்றும். ஆனால் எச்சம் அடை (attribute) ஆகச் செயலாற்றும். வினைமுற்று அடைகொளி (head) ஆக அமையும். வினைமுற்று பெரும்பாலும் முடிக்கும் சொல்லாக மொழியில் அமையும். ஆனால் வினையெஞ்சு கிளவி வினையைக் கொண்டும், பெயரெஞ்சு கிளவி பெயரைக் கொண்டும் முடிவுறும். (தொ.சொ. 234,432,433).

எ-டு. உழுது சென்றான்; உண்டு மகிழ்ந்தான்.
உண்ட சாத்தன்; ஓடின குதிரை.

வினைமுற்று

தமிழ் வினைமுற்றுக்களை இடவேறுபாடு (person distinction) உணர்த்துவதன் அடிப்படையில் இடவேறுபாடு உணர்த்தும் வினைமுற்றுக்கள் (Personal Finite Verbs), இடவேறுபாடு உணர்த்தாத வினைமுற்றுக்கள் (Impersonal Finite Verbs) எனப்பகுக்கலாம். திணை-பால் விகுதிகளை ஏற்பன முதல் வகையின; அவற்றை ஏற்காதன இரண்டாம் வகையின. பெரும்பாலான செயல்வினைகளும் (Indicative verbs) முதல் வகையில் அடங்கும். எ-டு. வந்தேன், வந்தாய், வந்தான் போன்றன. வியங்கோள் வினை, 'செய்யும்' என்னும் வாய்ப்பாட்டு வினைமுற்று, இன்மை செப்பல், உண்டு போன்ற வினைச் சொற்கள் இரண்டாம் வகையில் அடங்கும். எ-டு. வருக, உண்ணும், இல்லை, இல் போன்றன.

### வினைவகைகள் (Modality)

எல்லா மொழிகளிலும் சில வாக்கியவகைகள் வினைச்சொற்களின் வேறுபட்ட வகைகளால் வேறுபடுத்தப்படுகின்றன. இவ்வினை வேறுபாடுகள் சொல்வேறுபாட்டு உருபன்களின் (inflectional morphemes) அடிப்படையிலோ அன்றேல் துணைவினைகளின் துணையாலோ அமைத்துக் கொள்ளப்படுகின்றன.

எ-டு. வந்தான், வருக — உருபன் வாயிலாக வேறுபாடு செய்யப்படுகிறது.

வரவேண்டாம் — துணைவினை வாயிலாக வேறுபாடு நிகழ்கிறது.

இவ்வாருன வேறுபட்ட வினைவகைகள் பேசுபவன் உள்ளப்பாங்கின் அடிப்படையில் அவன், செயல் எவ்வாறு நிகழவேண்டும் என்பதை உணர்த்தப் பயன்படுகின்றன. தமிழ் மொழியில் பின்வரும் வினைவகைகள் வழக்கில் அமையக் காணலாம்.

### 1. செயல் வினை (Indicative Verb)

செயல்வினை நடுவுநிலைப்பாங்கில் ஒரு செயல் நிகழ்ச்சியை அல்லது எண்ணத்தினைப் புலப்படுத்த உதவுகின்றது. தமிழில் இவ்வகையான வினை காலம், இடம், திணை-பால்-எண் ஆகிய வேறுபாடுகளை உணர்த்துகின்றதாக அமையும்.

எ-டு. நான் வந்தேன், வருகிறேன், வருவேன்.

அவன் வந்தான், அவள் வந்தாள்.

### 2. எதிர்மறை வினை (Negative Verb)

இவ்வினை ஒரு செயல் நிகழ்ச்சியை அல்லது எண்ணத்தினை மறுக்கின்றதை உணர்த்தப் பயன்படுகின்றது. இதில் எதிர்மறைக்குறியீடு அமைந்து நிற்கும். இது திணை - பால் - எண், இடவேறுபாடுகளை உணர்த்தும்.

எ-டு. அவன் வரான், நீ வராய்.
இன்று மழை பெய்யாது.

3. ஏவல்வினை (Imperative Verb)

ஏவல்வினை, கட்டளை, வேண்டுதல், ஆணை முதலியவற்றை வெளியிடப் பயன்படுகின்றது. இது முன்னிலையில் மட்டும் எதிர்காலத்தில் வழங்கும்; கால வேறுபாடு, திணை-பால் வேறு-பாடு உணர்த்துவதில்லை; ஆனால் எண் வேறுபாடு உணர்த்தும்.

எ-டு. வா, போ, சென்றீ, ஆகு (புறம். 40)
கேளாய் (நற்.61), வாராய் (நற்.250)
தம் (புறம்.203), சேர்மின் (புறம்.9)

4. விலக்கு (தடை) வினை (Prohibitive Verb)

இது ஏவலில் எதிர்மறைப் பொருள் உணர்த்துவதாகும். இது முன்னிலையில் மட்டும் வழங்கும். இதில் எதிர்மறைக் குறியீடு(negative marker)வெளிப்படையாக அல்லது மறைந்து அமையும்.

எ-டு. நீங்கல் (நற்.124), செல்லல் (புறம்.259)
அழேல் (அகம்.97), அழியாதி (கலி.13)
செய்யாதீமே (குறு.390)
வராதே, நீ அங்குச் செல்ல வேண்டா(ம்),
நீ இங்கு வரக்கூடாது.

இக்காலமொழியில் வேண்டா(ம்), கூடாது போன்ற துணை-வினைகளுடன் அமையும் விலக்கு வினைகள் படர்க்கையிலும் வழங்குதல் உண்டு.

எ-டு. அவன் இங்கு வரல் வேண்டா(ம்).
அவன் வீட்டுக்குப் போகக் கூடாது.

5. வியங்கோள் வினை (Optative Verb)

இது விரும்புதல், வாழ்த்தல், பழித்தல், வெறுத்தல் முதலிய உணர்வுகளைத் தெரிவிக்கப் பயன்படுத்தப்படுகின்றது. இதில் காலம், திணை-பால்-எண், இடம் முதலியவற்றை

உணர்த்தும் குறியீடுகள் அமைதல் இல்லை. வினையடியுடன் வியங்கோள் விகுதி இணைந்து இது அமைகின்றது.

எ-டு. வாழ்க, வளர்க

வாழிய (புறம்.9), நிலியர் (புறம்.2)

சிறக்க (புறம்.6), ஆகுக (பரி. 14)

6. கட்டாய வினை (**Obligatory Verb**)

இது ஏதேனும் ஒரு செயலினைக் கட்டாயமாகச் செய்ய வற்புறுத்துகிற முறையில் கூறப்படுகின்றது. இது தொழிற் பெயர் அல்லது 'செய' என்னும் வாய்பாட்டு எச்சத்துடன் 'வேண்டும்' என்னும் துணைவினையை இணைத்துக் கூறப்படுகிறது. இவ்வகையான வினை அமைகின்ற வாக்கியத்தில் எழுவாய், பயனிலை இயைபு காணப்படுதல் இல்லை.

எ-டு. செய்தல் வேண்டும் (புறம். 213)

செயல் வேண்டும் (தொ. சொ. 243)

சூழல் வேண்டும் (நற். 122)

அவன் வரல் வேண்டும் / அவன் வர வேண்டும்.

நீ செய்தல் வேண்டும்/நீ செய்ய வேண்டும்.

பழந்தமிழில் தொழிற்பெயருடன் இணைந்தே 'வேண்டும்' என்னும் சொல் அமைதல் கருதத்தக்கது. மேலும் தொல்காப்பியனர்

இதுசெயல் வேண்டும் என்னும் கிளவி
இருவயின் நிலையும் பொருட் டாகும்மே
................................................ (தொ. சொ. 243)

என்று கூறும் நூற்பாவின் இலக்கணம் இவ்வகை வினைக்கு விளக்கமாக உள்ளது.

எ-டு. ஓதல் வேண்டும், சாத்தன் ஓதல் வேண்டும்.

7. அனுமதி வினை (Permissive Verb)

இக்காலத்தமிழில் வழங்கும் இவ்வினை பேசுபவனது அனுமதியை உணர்த்தப் பயன்படுகிறது. தொழிற்பெயருடன் 'ஆம்' என்னும் துணைவினையைச் சேர்த்து முன்னிலையிலும் படர்க்கையிலும், வினையடியுடன் 'அட்டும்' என்னும் ஒட்டினை இணைத்து படர்க்கையில் மட்டும் இவ்வினை வழங்கப்படுகின்றது.

எ-டு. நீ வரலாம் வரல் - ஆம்
அவன் வரலாம்
அவன் வரட்டும்

8. ஆற்றல் வினை (Potential Verb)

இது கருத்தாவினது வினைசெயல் ஆற்றலினை உணர்த்தப் பயன்படுகின்றது. 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்துடன் 'முடியும்' என்னும் துணைவினையைச் சேர்த்து இது கூறப்படுகிறது. இவ்வினை அமையும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை இயைபு அமைதல் இல்லை.

எ-டு. என்னால் இதைச் செய்ய முடியும், நான் இதைச் செய்ய முடியும், அவனால் பாட முடியும்.

இங்கு 'முடியும்' என்பதற்குப் பதிலாக 'இயலும்' என்ற சொல் வழங்குதலும் உண்டு.

# 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று

சொற்களை வாய்பாடுகளில் அமைத்துக் கூறுவது தமிழ் மொழி இலக்கண மரபில் தொன்று தொட்டே அமைந்த ஒரு வழக்காகும். தொல்காப்பியனார் கூறும் ஒன்பது வினையெச்ச வாய்பாடுகள், இரு பெயரெச்ச வாய்பாடுகள், 'செய்யும்' என்னும் வினைமுற்று வாய்பாடு, செய்யாய், செய் ஆகிய வாய்-பாடுகள், உரியியலில் சில வேர்ச்சொற்களைப் புலப்படுத்த அமைத்துள்ள தொழிற்பெயர் வாய்பாடுகள்[1] யாவும் இதற்குச் சான்று தந்து நிற்கின்றன. நன்னூலாரும் பலவகையான சொற்களை இவ்வாய்பாட்டு முறையிலே அமைத்துக் கூறி உள்ளார்[2]. இவற்றுள் யாம் இவண் விளக்க விழைவது தொல்-காப்பியனாரும் நன்னூலாரும் குறிப்பிடும் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றினையேயாம். அதனை விளக்க இலக்-கண முறையிலும், பின்னர் வரலாற்று இலக்கண முறையிலும் ஆராய்வோம். அதனை ஆயுங்கால், அதனோடு தொடர்புபட்ட பிறசொற்கள், அதன் வடிவில் அல்லது வாய்பாட்டில் அமைந்த வேறுபட்ட சொற்கள் யாவற்றையும் கொணர்ந்து தெளிவாக்-குதல் நன்மை பயக்கும்.

---

1. தொல்.சொல், 222, 227, 228, 450.
   தொல்.சொல், உரியியல் 315, 316, 311, 317, 318, 319, 330, 333, 342, 347, 350, 358, 359, 361, 374 முதலியன.

2. நன்னூல், 135, 138, 340, 343.

வினைமுற்றுக்கள்

தமிழ் மொழியில் வினைமுற்றுக்கள் பெரும்பாலும்[3] வினையடியினின்று தோன்றி, காலம், இடம், எண்—பால் ஆகியவற்றைக் குறிக்கும் உருபன்கள் இணைக்கப்பெற்று முற்றுப்பெறுகின்றன. அவை பயனிலைகளாகப் பணியாற்றுகின்றன[4]; தொல்காப்பியனார் வினைக்குக் கூறும்,

> வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
> நினையுங் காலைக் காலமொடு தோன்றும் (தொ. சொ. 198)

என்னும் இலக்கணம் பெற்று அமைகின்றன. அவை குறித்து நிற்கும் பல்வேறு உறுப்புக்களைத் தொல்காப்பியனார் பிறிதோர் இடத்தில் கூறி உள்ளார்.[5] முற்றுவினைகளையும் எச்சவினைகளையும் தெளிவாக வேறுபடுத்துவது, முற்று வினைகளில் இடம், எண்—பால் அறிகிளவிகள் உண்மையும், அச்சொற்கள் எழுவாய் ஏற்றுப் பயனிலையாகப் பணி ஆற்றி நிற்கும் இயல்பும், எச்சவினைகளில் இடம், எண்—பால் அறிகிளவிகள் இன்மையும் அவை பிறிதோர் வினையினை அல்லது பெயரினைத் தழுவி நிற்கும் இயல்புமாம். சில இடங்களில் எச்சங்கள் கூட இடம், எண்-பால் அறிகிளவிகள் ஏற்று வருதலும் உண்டு.[6] எனவே மிகத் தெளிவான வேறுபாடு வினைமுற்றுக்கள் பயனிலை ஆதலும் எச்சங்கள் பெயர் வினைகளைத் தழுவி நிற்றலும் ஆம்.

---

3. சிறுபான்மையான குறைவினைகள் (குறிப்பு வினைகள்) வினையல்லாத பிற அடிகளினின்று தோன்றுதல் உண்டு. எ-டு. அல்லன், இலன், உடையன் போன்றன.
4. தொல்.சொல். 66.
5. ,, ,112.
6. உண்பான் வந்தான், கொண்மார் வந்தார், கொள்வான் வந்தான் போன்றவை எடுத்துக்காட்டுகளாகும். இவை போன்றனவற்றை நன்னூலார் முற்றெச்சம் (நன். 351) என்பர்.

'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்று

இவ்வகையாம் வினைமுற்று, வடிவிலும் (form) பயன் வகையிலும் (function) தனிச் சிறப்புடையது. வினைமுற்றுக்கள் இடம், எண்—பால் அறி உருபன்கள் (person and number-gender morphemes) ஏற்று வருதல் இயல்பு. ஆனால் 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்றுக்களில் இவற்றைக் காண முடியாது. இவ்வாய்பாடு செய்+உம் எனப் பிரிக்கப்படினும் 'உம்' இடம், எண்—பால் குறிக்கும் உருபன் ஆவதில்லை. ஏனெனில் தொல்காப்பியனார் இதனை இரு திணைப் பொது வினைக்(விரவு வினைக்) குழுவில் அடக்கி உள்ளார்.[7] மேலும் அது பல பால்களுக்குப் பொதுவானது என்பதை

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
யவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச்
செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா
(தொ. சொ. 227)

என்னும் நூற்பாவால் அறியலாம். எனவே 'உம்' எந்தத் தனிப்பட்ட பாலையும் குறித்து நிற்றல் இயலாது என்பது தெளிவு. மேற்கண்ட நூற்பாவில் தொல்காப்பியனாரே இது தன்மை, முன்னிலை ஆகிய இடங்களிலும் படர்க்கை பலர்பாலிலும் வழங்காது என்று தெளிவாகக் குறிப்பிடுகின்றார். நன்னூலார் தொல்காப்பியனாரையே பின்பற்றி

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே (நன். 348)

என்று கூறியுள்ளார். எனவே அன்னார் காலங்களில் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று பின்வருமாறு வழங்கி இருத்தல் வேண்டும்.

---

7. தொல்.சொல். 222.

அவன் உண்ணும்
அவள் உண்ணும்
அது உண்ணும்
அவை உண்ணும்

காலம்

ஆனால் இருவர் கூற்றினுள்ளும் வேறுபாடு ஒன்று உள்ளது. தொல்காப்பியனார் "நிகழுங்காலத்துச் செய்யுமென் கிளவி"[8] என்று குறிப்பிடுவதினின்று அது நிகழ்காலம் காட்டிற்று என்பது தெளிவு. நன்னூலார் இதன் வழக்கு இடங்களை வரையறுக்கும் நூற்பாவின்கண் காலத்தைப்பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. ஆனால் பிறிதோரிடத்தில் "செய்யு நிகழ்பெதிர்வும்"[9] எனக் குறிப்பிட்டு அது குறித்து வழங்கும் காலத்தைத் தெளிவுபடுத்தி உள்ளார். தொல்காப்பியனார் காலத்தில் 'செய்யும்' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் நிகழ்வு, எதிர்வு ஆகிய இரு காலங்களுக்கும் பொதுவானது என்பது தெளிவு. ஏனெனில் செய்த, செய்யும் என்னும் இரு வாய்பாடுகளிலேயே அவர் பெயரெச்சத்தைக் குறித்துள்ளார். ஆனால் நன்னூலார் செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் மூன்று வாய்பாடுகளைத் தருகின்றமையான்[10] 'செய்யும்' என்னும் எச்சம் நிகழ்வு, எதிர்வு ஆகிய இருகாலங்களைக் காட்டுகின்றதாக குறிப்பிடத் தேவை இல்லை. எனவே நன்னூலார் குறிப்பிட்டிருக்கும் "செய்யு நிகழ்பெதிர்வும்" என்னும் தொடர் அவ்வாய்பாட்டு வினைமுற்றுக்களின் காலத்தையே விளக்கி நிற்கின்றது என்பது தெளிவு.

தொல்காப்பியனார் நிகழ்காலத்தது என்று குறிப்பிடும் 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்று நன்னூலார் காலத்தில்

---

8. தொல். சொல்., 227.
9. நன்னூல், 145.
10. ,, , 340.

எதிர்காலத்தையும் குறித்தது. தொல்காப்பியனுர் காலத்தில் இவ்வாய்பாட்டு வினைமுற்றுக்களைத் தவிர நன்னூலார் கூறும் "ஆநின்று, கிறு, கின்று" என்ற நிகழ்கால இடைநிலைகள்[11] அமைந்த வினைமுற்றுக்கள், எச்சங்கள் தோன்றவில்லை. சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூற்களிலும் நன்னூலார் குறிப்பிடும் நிகழ்கால வடிவங்கள் பெரும்பாலும் வழங்கவில்லை எனலாம்[12]. சங்ககாலத்தில் இறந்த காலத்தைக் குறிக்க வேறுபட்ட சொல் வடிவங்களும், எதிர்காலத்தைக் குறிக்க வேறுபட்ட சொல் வடிவங்களும் வழங்கி உள்ளன. நிகழ்காலத்தில் மட்டும் எத்தகைய சொல் வடிவங்கள் வழங்கின என்று தெளிவாக அறிதற்கில்லை. 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்றுக்கள் தான் வழங்கி இருத்தல் வேண்டும் என்று கருத இடமுண்டு. ஆனல் அவை சங்க இலக்கிய வழக்கில் பெரும்பாலும் எதிர்காலப் பொருளையே தந்து நிற்கின்றன. எனவே நிகழ்காலம் என்ற ஒன்று அக்காலத்தில் இல்லையா எனின், உண்டு. தொல்காப்பியனுர் "காலந்தாமே மூன்றென மொழிப" என்றும் "இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ரு ..........." என்றும்[13] குறிப்பிடுவன மூன்று காலங்கள் உண்மையைத் தெளிவுபடுத்துகின்றன. இவண் காலஞ் சென்ற சிவராச பிள்ளை அவர்கள் பண்டைத் தமிழில் காலம் பற்றிக் கூறியுள்ளது கவனித்தற்பாற்று. "நுணுகி ஆராய்ந்து பார்க்கின், காலம் எல்லாம் இறப்பு, எதிர்வு என்னும் இரு கூறுபாட்டினுள் அமையக் காண்கிரேம். 'காலம்' நிலைத்து நில்லாது எஞ்ஞான்றும் ஓர் நதி போலப் பாய்ந்து செல்லுவதாதலின் அதன் நடுவண் நிகழ்வெனும் ஒரு சிறு கோட்டை நீக்கின் அக்கோட்டின் முன்னுள்ளவெல்லாம் இறப்பின்பாலும், பின்னுள்ளவெல்லாம் எதிர்வின்பாலும் சென்று அடங்கி

---

11. நன்னூல் 143.
12. ஆனல், 'சேர்கின்ற' என்ற ஒரு வினையெச்ச வடிவம் பரிபாடலில் (22) காணப்படுகிறது.
13. தொல்.சொல். 199, 200.

விடும். இறப்பு எதிர்வுகளால் நெருக்குண்டு நிகழ்வாய காலம் தன் பரிமாணம் அறவே குறுகி மாய்ந்துபோகக் காண்கிறோம்.




இறந்த காலம் எதிர்காலம் போலத் தமிழில் நிகழ்காலம் அத்துணை வந்து பயிலாமைக்கு இவ்வுண்மையே அடிப்படையாய காரணமாவிருக்கலாம்''.[14] இக்கூற்று தொல்காப்பியனார் கால வழக்கினையும் மிகத் தெளிவுபடுத்திக் காட்டுகின்றது. எனவே பழங்காலத் தமிழில் இறப்பு, இறப்பன்மை (past and nonpast) என இரண்டு கால வேறுபாடுகள் தான் தெளிவாக அமைந்திருந்தன. தொல்காப்பியனார் 'செய்யும்' நிகழ்காலங் குறிக்கும் எனக் கூறி இருப்பினும் நிகழ்காலத்தில் வழங்க தன்மை, முன்னிலை இடங்களிலும், படர்க்கை பலர்பாலிலும் வினைவடிவங்கள் தராமையும் இவ்வுண்மைக்கு அரண் செய்யும் சான்றுகளாக அமைகின்றது. மேலும் ஒரிசா மாநிலத்தின் கொரபுட் என்னும் மாவட்டத்தில் இன்றும் பேசப்படும் திராவிட மொழிகளான ஒல்லாரி, கோண்டா, கூவி, கூயி மொழிகளில் நிகழ்வு, எதிர்வு ஆகிய இரு காலங்களைக் குறிக்கவும் ஒரே வினைச்சொல் வேறுபாடு (verbal conjugation) தான் அமைந்துள்ளமையும் நோக்குங்கால் இந்த அமைப்பு மிகப் பழங்காலத் திராவிட மொழி இயல்பின் நிலைபேறு (retention) எனக் கருதவும் இடம் உண்டு.[15] இவற்றோடு தொல்காப்பியனார் நிகழ்வு எதிர்வு

14. சிவராச பிள்ளை, கே. என்., 'உந்து' என்னும் இடைச்சொற் பிரயோகம் அல்லது புறநானூற்றின் பழமை (1929), பக். 47, 48.

15 Bhattacharya., S., Ollari A Dravidian Speech (1956), p. 33. Krishnamurthi, Bh., Konda or Kubi, A Dravidian Language (1969), p. 263.

ஆகிய இரு காலங்களுக்கும் 'செய்யும்' என்னும்[16] ஒரே வாய்-பாட்டுப் பெயரெச்சத்தைக் குறிப்பிட்டிருப்பதும் கருதத்தக்கது.

'செய்யும்' என்னும் வினைமுற்று நிகழ்காலத்து வழங்கும் என்று குறிப்பிட்ட தொல்காப்பியனார் மூன்று காலங்களுக்கும் உளதாம் இயல்பையுடைய (habitual) எல்லாப் பொருளையும் நிகழ்கால வினையாற் கூறவேண்டும் என்கிறார்.[17] இதற்கு உரையாசிரியர்கள்

மலைநிற்கும்; திங்கள் இயங்கும்

என்பன போன்ற எடுத்துக்காட்டுக்களைத் தருகின்றனர். மேலும் தொல்காப்பியனார் மிக்கதன் கண் நிகழும் வினையின் பயன் கூறுங்கால், அம்மிக்கதனது பண்பு குறித்துவரும் வினை முதல் இல்லாத விடத்து நிகழ்காலத்தான் கூறப்பட வேண்டும் என்-கிறார்.[18]

எ-டு தவஞ்செய்தான் சுவர்க்கம் புகும்.
தாயைக்கொன்றான் நிரயம் புகும்.

இவைபோன்ற வழக்குகள் யாவும் 'செய்யும்' என்னும் வாய்-பாட்டு வினைமுற்றுக்கள் காலங்காட்டுவதில் நிகழ்காலத்திற்கு மட்டும் உறுதிப்படுத்தப்பட்டனவல்ல என்பதைத் தெளிவு செய்து நிற்பனவாகும்.

எனவே, 'உம்' தொல்காப்பியனார் காலத்தில் நிகழ்-காலத்தை மிகுதியாகக் குறித்தது எனவும், சங்க இலக்கிய காலத்தில் அது எதிர்காலத்தையும் குறிப்பதாயிற்று என்பதும் தெளிவு. சங்ககாலத்திற்குப் பிற்பாடு நிகழ்காலத்திற்கெனத் தனிப்பட்ட வினை வேறுபாட்டு வடிவங்கள் தோன்றவே 'உம் பெரும்பான்மையும் எதிர்காலத்தை உணர்த்திச் சிறுபான்மை

---

16. தொல். சொல். 222, 234.
17. தொ. சொல். 240.
18. ,, 242.

நிகழ்காலம் உணர்த்தலாயிற்று. எனவேதான் நன்னூலார் ''செய்யு நிகழ்பெதிர்வும்'' என்று குறிப்பிட்டார். இன்றைய தமிழில் 'உம்' இடைச்சொல் அது வரும், அவை வரும் போன்ற எடுத்துக்காட்டுக்களில் எதிர்காலத்தை மட்டும் குறித்து வழங்குகின்றது.

வடிவம்

தொல்காப்பியனர் 'செய்யும்' என்னும் பெயரெச்சத்தின் ஈற்று உகரம் மெய்யொடு கெட்டுவிடும் என்கிருர்[19]. அவர் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று அடையும் மாற்றங்களைக் குறிப்பிட்டிலர். ஆனல் சேனவரையர் ''செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங் கெடுமெனவே 'செய்யும்' என்னும் முற்றுச் சொற்கு ஈற்று மிசை உகரம் மெய்யொடுங் கெடும்; மெய்யொழித்துங் கெடும்'' என்கின்ருர். பிற்கால இலக்கண ஆசிரியரான நன்னூலாரும்

செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளு ளும்முந் தாகலும் முற்றேல்
உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே (நன்.341)

என்னும் நூற்பாவில் 'செய்யும்' என்னும் வினைமுற்றின் ஈற்று உயிர் அல்லது உயிர்மெய் கெட்டுப்போதல் உண்டு என்பதைத் தெளிவுபடுத்தி உள்ளார்.

| | | |
|---|---|---|
| எ.-டு. சென்ம் | (புறம். 137) | உயிர் கெட்டது (லகரம் னகரமாக மாறியுள்ளது) |
| போன்ம் | (புறம். 19) | |
| கூம் | (புறம். 4) | உயிர் மெய் கெட்டது. |
| ஆம் | (புறம். 134) | |

இங்ஙனம் உகரம் கெடுங்கால் மகரம் மட்டும் காலம் உணர்த்துகின்றது. எனவே உம்/ம் காலக்குறியீடு ஆகும்.

---

19. தொல். சொல். 238.

'செய்யும்' வினைமுற்றினின்று தோன்றிய பிற சொற்கள்

1. கொய்யுமோன் (புறம். 225), அறியுமோன் (புறம். 137) போன்ற சொற்கள்

கொய் + உம் + ஓ — ன்
கொய்யும் + ஓன்
கொய்யுமோன்

இவற்றின்கண் 'உம்' பெரும்பாலும் எதிர்காலத்தை அல்லது வழக்கமான நிகழ்ச்சியைக் (habitual) காட்டுகிறது என்று தான் கருத முடிகிறது; ஓ < ஆ (தொ.சொ.211).

2. கொண்மார், நோன்மார் (நற்.208) போன்ற மாரீற்றுவினைச் சொற்கள்.

மாரீற்று வினைச் சொற்கள் சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் வினையெச்சங்களாகவே செயலாற்றுகின்றன. ஒரு சில இடங்களில் மட்டும் வினைமுற்றுக வழங்குகின்றன. இளைய பெருமாள் அவர்கள் இவற்றின் இத்தகைய வேறு பயன் வகைகளை விளக்கிக் கட்டுரை ஒன்று வரைந்துள்ளார்கள்[20]. அக்கட்டுரையின்கண் அன்னார் இச்சொற்கள் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைகளினின்று ஆக்கப்பட்டிருத்தலையும் பகுத்து விளக்கித் தெளிவு படுத்துகின்றனர். மாரீற்றுச்சொற்களைப் பின்வருமாறு பிரிக்கலாம்.

கொள்+உம்+ஆர்
கொள்ளும்+ஆர்
கொண்ம்+ஆர்
கொண்மார்

3. என்மனார் (தொ.எழு. 6, 33, 53, 131, 147, 159, 179, 223, 273, 284, 289, 332, 334, 345, 370, 414, 433 474, 478, 483).

---

20. Elayaperumal. M., "The Mar Suffix in Early Tamil Literature", Indian Luiguistics, Ralph Turner Volume I, 177-181.

தொல்காப்பியனாரே இச்சொல்லைப் பலமுறை ஆண்டுள்ளார். இதனைப் பிரித்துக்காட்டுவதில் உரையாசிரியர்கள் பெரிதும் இடர்ப்படுகின்றனர். இவண் இதனைப் பிரித்துக்காட்டலாம்.

என் + உம் + அன் + ஆர்
என்னும் + அன் + ஆர்
என்ம் + அன் + ஆர்
என்மனார்

4. உண்மர் (பதிற். 24), கொண்மர் (பத்துப்பாட்டு 6, 514) போன்ற சொற்கள்

உண் + உம் + அ—ர்
உண்ணும் + அர்
உண்ம் + அர்
உண்மர்

5. காணுமோர் (பதிற். 83). பாடுமோர் (புறம். 197) போன்ற சொற்கள்

காண் + உம் + ஓ – ர்
காணும் + ஓர்
காணுமோர்

பல்லோர் படர்க்கையில் 'செய்யும்' என்னும் வினைமுற்று வராது என்பது இலக்கண நூலார் கொள்கை. இலக்கியங்களிலும் அது பல்லோர் படர்க்கையில் வழங்குதலைக் காண முடியாது. ஆனால் மேற்காட்டப்பட்டவை 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வடிவமே இடம், பால்-எண் உருபன்களை ஏற்றுப் பலர்பாலில் வழங்குவனவாகும். இத்தகைய வழக்கினைச் சங்க இலக்கியங்களில் பல இடங்களிலும் காணுதல் இயலும்.

மாரீற்றிலுள்ள மகரம் தன்மைப் பன்மைப் பெயர்களான நாம், யாம், எம்; வினை விகுதிகளான தும், றும், கும், டும் என்பவைகளில் உள்ளவைபோல பன்மைகுறிப்பது என்று யூலியன் வின்சன் கருதுவதை டாக்டர் சுப்பிரமணிய சாத்திரி

அவர்களும் ஒப்புக் கொள்ளுகிறார்கள்[21]. இது பொருத்தமாகத் தோன்றவில்லை. ஏனெனில் பன்மை குறிக்கும் உறுப்பு இறுதியில் உள்ளது. மேலும் 'உம்/ம்' கொய்யுமோன் போன்ற ஒருமைச் சொற்களிலும் உள்ளது. அதோடு மகரம் பன்மை குறிப்பதாயின் மாரீற்று வினைச்சொற்களில் காலங்காட்ட வேறு உருபன் இல்லாது போய் விடுகின்றது.

மாரீற்றுச் சொற்களில் உள்ள மகரம் எதிர்காலம் குறிப்பதேயாகும். இதனை உரையாசிரியர் சேனாவரையர் மறுக்கிறார். அவர் எழுதுவன பின்வருமாறு: ''மார் எதிர்காலம் பற்றி வந்த ஆரேயாம், ரகரான் ஒற்றென அடங்கு மெனின்'' அற்றன்று. ஆரேயாயின் கொண்மார் என்புழி மகரம் காலம் பற்றி வந்ததோர் எழுத்தாதல் வேண்டும்; உண்பார் வருவார் எனக் காலம் பற்றி வரும் எழுத்து முதனிலைக் கேற்ற வாற்றான் வேறுபட்டு வருமன்றே; அவ்வாறன்றி உண்மார், வருமார் என எல்லா முதனிலைக் கேற்ற வாற்றான் வேறுபட்டு வருமன்றே; அவ்வாறன்றி உண்மார், வருமார் என எல்லா முதனிலை மேலும் மகரத்தோடு கூடி வருதலாலும், வினைகொண்டு முடிதற்கேற்பதோர் பொருள் வேறுபாடுடைமையானும் ஆர் ஈறு அன்று வேறெனவேபடும்''[22]. சேனாவரையர் கூற்றுக்கு எளிதில் விடையிறுத்தல் இயலும். முதலாவது, மாரீற்றுச் சொற்கள் எதிர்காலத்தின்கண்ணேதான் சங்க இலக்கியங்களில் வழங்குகின்றன. இரண்டாவது, காலவெழுத்து முதனிலைக்கேற்றவாற்றான் வேறுபட்டு வரும் என்பது முற்றிலும் பொருந்தாது என்பதைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் தெளிவு படுத்தும்.

---

21. Dr. Subrahmanya Sastri, P S., History of Grammatical Theories in Tamil and their relation to the Grammatical Literature in Sanskrit (1934), p. 162.

22. சேனாவரையர், தொல்காப்பியம் சொல்லதிகார உரை, ப. 8.

1. கூறுப (கலி. 144) கூறுவ (கலி.146)
2. ஆகுப (குறு. 7) ஆகுவ (புறம். 104)
3. உகுப (கலி. 48, 11) உகுவ (குறு. 282)

6. செய்யுந்து, ஒலிக்குந்து (புறம். 137), நிலைக்குந்து (புறம். 386) போன்ற சொற்கள்

செய்+உம்+து
செய்யும்+து
செய்யுந்து

தொல்காப்பியனுர் "உம்முந்தாகு மிடனுமா ருண்டே" (தொ.சொ. 262) என இடையியலுள் கூறி உள்ளார். சேனுவரையரும் நச்சினர்க்கினியரும் இதனையே பெயரெச்சத்தின்கண் வரும் 'உம்' எனக் கருதுகின்றனர். நன்னூலாரும் 'செய்யும்' என்னும் பெயரெச்சத்தின் ஈற்று 'உம்' உந்து எனத் திரிகிறதாகக் கருதுகிருர்.[23] ஆனல் சங்க இலக்கியங்களில் பெயரெச்சத்தின் இறுதி 'உந்து' எனத் திரிதற்கு எடுத்துக்காட்டுக்கள் ஒன்றும் காணப்பெறவில்லை. வினைமுற்று வடிவங்களே 'உந்து' என்னும் ஈற்றுடன் அமைந்துள்ளன. காலஞ் சென்ற வேங்கடராசுலு ரெட்டியார் அவர்கள் இது தொடர்பாகக் கொண்ட ஆராய்ச்சி முடிவுகள் இங்கு நோக்கும் பான்மையன: "எண்ணுப்பொருளில் வரும் 'உம்' உந்து ஆகும் என்பது தெளியப்படும். செய்யும் என்னும் முற்றுச் சொல்லோடு துவ்விகுதி மட்டும் கூடிவந்த சொல்லே செய்யுந்து என்ருயிற்று என்பது போதரும்".[24]

'உம்' என்பதனேடு துவ்விகுதி இணைந்து செய்யுந்து வாய்பாட்டில் அமைந்துள்ள வினைமுற்றுக்கள் ஆக்கப்பட்டுள்ளன என்பது தெளிவான உண்மை. தொல்காப்பியனுர் 'உம்' உந்து என்று ஆகும் என்று குறிப்பிடும் நூற்பாவை 'செய்யும்'

---

23. நன்னூல், 341.
24. வேங்கடராசுலு செட்டியார், வி., பரணர், பக். 195, 197

என்னும் வாய்ப்பாட்டு வினைமுற்றைப் பற்றிக் கூறும் நூற்பாவை அடுத்து வைக்காமல் இடையியலுள் என்னும்மைகளை அடுத்து வைத்திருப்பதால்தான் வேங்கடராசுலு ரெட்டியார் அவர்கள் எண்ணுப் பொருளில் வரும் வழியே 'உம்' உந்து ஆகும் எனக் கருதுகின்றார். இக்கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட இன்னும் பல ஆய்வுகள் தேவையாகும். பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் செய்யுந்து என்பதனை செய்யுன்+து எனப்பிரித்தல் வேண்டுமெனக் கருதுகின்றார்கள். [25]

7. செய்ம்மன (தொ. சொ. 222; தொ. எழு. 210), இசைக்குமன (தொ. சொ. 1.) போன்ற சொற்கள்

செய் + உம் + அன் + அ
செய்யும் + அன் + அ
செய்ம் + அன் + அ
செய்ம்மன

இச்சொல்லை வகை செய்வதிலும், இதன் உறுப்புக்களைக் கண்டு கொள்வதிலும் உரையாசிரியர்கள் பெரும் இடர்ப்பாடு அடைகின்றனர். தெய்வச்சிலையார் 'செய்ம்மன' என்பதை விளக்குங்கால், "இது இக்காலத்துச் செய்வது, செய்வன, செய்பவை, செய்யுமவை என வழங்கும்போலும்" எனக் கூறுவதினின்று 'செய்ம்மன' வாய்பாட்டு வினைச்சொற்கள் வழக்கில் பெயராகப் பணியாற்றின என்பது தெளிவாகின்றது. பெயராக வழங்கின் மட்டுமே தொல்காப்பியனார் கூறுகின்றவண்ணம் இருதிணைக்கும் பொதுப் பயனிலையாக வழங்குதல் இயலும். வினையாக வழங்கின் இது அஃறிணைப் பன்மையில் மட்டுமே வழங்குதல் இயலும்.

எனவே 'செய்யும்' என்னும் வாய்ப்பாட்டு வினைமுற்று குறிப்பிட்ட எண் - பால் அறிகிளவிகளை ஏற்று (திணைபால்

---

25. Meenakshisundaran, T. P., A History of the Tamil Language, (1965) p. 92.

விகுதிகளைப் பெற்று) செய்யுமோன், செய்ம்மார், செய்மனூர், செய்மர், செய்யுமோர், செய்யுந்து, செய்ம்மன எனத் தன் எல்லையைக் குறிப்பிட்ட ஒருபாலுக் குரியதாக வரையறுத்துக் கொள்ளுதல் உண்டு. இத்தகைய அமைப்புக்கள் யாவும் எதிர்-காலங் காட்டுகின்றனவென்று பேராசிரியர் எல்.வி. இராமசாமி ஐயர் அவர்களும் கருதுகின்றனர்.[26]

'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றும்,
பெயரெச்சமும்

தொல்காப்பியனூர் 'செய்யும்' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தையும் இருதிணைப் பொது வினைகளுள் அடக்கி உள்ளார். பெயரெச்சம் பெயரைக் கொண்டு முடியும்.[27] ஆனல் வினைமுற்று பயனிலையாகச் செயலாற்றும். மேலும் 'செய்யும்' என்னும் வினைமுற்றிற்குக் குறிக்கப்பட்டது போன்ற வரையறைகள் 'செய்யும்' என்னும் பெயரெச்சத்திற்குக் கிடை-யாது.[28] அது எல்லா இடங்களிலும் பால்களிலும் வழங்கும்.

எ - டு.

| வினைமுற்று | பெயர் எச்சம் |
|---|---|
| அவன் உண்ணும் | யான் உண்ணும் ஊண் |
| அவள் உண்ணும் | ய்ாம் உண்ணும் ஊண் |
| அது உண்ணும் | நீ உண்ணும் ஊண் |
| அவை உண்ணும் | நீயிர் உண்ணும் ஊண் |
| | அவன் உண்ணும் ஊண் |
| | அவள் உண்ணும் ஊண் |
| | அவர் உண்ணும் ஊண் |
| | அது உண்ணும் ஊண் |
| | அவை உண்ணும் ஊண் |

26. Prof. Ramaswami Aiyar, L.V., "The Morphology of the Old Tamil Verb", Anthropos, 33 (1938), pp 747-781.
27. தொல். சொல். 234, 433, நன்னூல், 340.
28. தொ.சொல். 235.

'செய்யும்' என்னும் வினைமுற்றும் ஏவலும்

இக்காலத்தில் உண்ணும், வாரும், செய்யும் என்பன போன்ற சொற்கள் உயர்வு ஒருமை (honorific singular) ஏவலாகப் பேச்சுத் தமிழில் வழங்குகின்றன. தொல்காப்பியனுர் செய்யும் / செய்ம் என்னும் வாய்பாட்டில் ஏவலைக் குறிப்பிடவில்லை. அவர் ஏவலை முன்னிலை வினையினின்று பிரித்து விளக்கவும் இல்லை. –மின் விகுதி ஏவலின்கண் மட்டுந்தான் வழங்கினும் அவர் ஏவல் எனக் குறிப்பிடவில்லை.[29] ஆனுல் நன்னூலார் "மின் அவற்றேவல்" என்று குறிப்பிட்டுள்ளார்.[30]

செய்யும் / செய்ம் என்னும் வாய்பாட்டு ஏவற் சொற்களும், அவற்றுடன் அசைச்சொல் இணைந்த சிறிது வேறுபட்ட வடிவங்களும்[31] சங்க இலக்கியங்களில் பன்மை ஏவலாக வழங்குகின்றன. இவைகள் முன்னர் யாம் விளக்கிய 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்றினின்று முற்றிலும் வேறுபட்டவை. அவற்ருேடு ஏவலில் வழங்கும் பன்மைச் சொற்களையும் சேர்த்து ஒரே தன்மையினவாகக் கருதி மயக்கமடையாதபடி ஏவலின் சொல்வடிவங்களையும் இவண் தருதும். இவை முன்னிலையில் மட்டும், பன்மையில் அல்லது உயர்வு ஒருமையில் வழங்கும்.

| | |
|---|---|
| வாரும் (பரி. 14) | கொண்ம் (புறம். 152) |
| | செய்ம் (புறம். 46) |
| | வம் (புறம். 180) |
| | களைம் (புறம். 145) |
| சேர்மின் (புறம். 32) | சேர் — ம் + இன் |
| கேண்மியா | கேள் — ம் + யா |
| மொழிமோ (குறு. 2) | மொழி — ம் + ஓ |
| செய்ம்மே (புறம். 46) | செய் — ம் + ஏ |

---

29. தொல். சொல். 224.
30. நன்னூல் 337.
31. இவண் குறிப்பிடுவன யாவும் 'செய்யும்' வாய்பாட்டு ஏவலை அடிப்படையாகக் கொண்டவைகளேயேயாம்.

இங்குத் தரப்பட்டிருக்கும் சொற்களின் அடிப்படை வேறு; முன்னர் விளக்கப்பட்ட 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்களின் அடிப்படை வேறு. இவண் தரப்பட்டிருக்கும் ஏவல் வினைகளில் உள்ள 'உம்/ம்' விகுதி முன்னிலைப்பன்மை அல்லது முன்னிலை உயர்வு ஒருமை ஏவலைக் குறிப்பதாகும். ஆனால் முன்னவற்றில் 'உம்/ம்' விகுதி காலக்குறியீடு என்று முன்னமே விளக்கப்பட்டது. டாக்டர். மு. வரதராசனார் அவர்கள் இவற்றின் வேறுபாட்டை மிகத் தெளிவாகப் பகுத்து உணர்த்தி உள்ளார்கள்.[32] ஏவல் எதிர் காலத்தின்கண்ணே நிகழ்தல் இயல்பாதலின் இங்கு 'உம்/ம்' காலம் உணர்த்தவேண்டிய இன்றியமையாமை இல்லை. ஆனால் டாக்டர் கால்டுவெல் இவை எதிர்காலத்தின் மீது கட்டப்பட்டிருப்பதாகக் கருதுகின்றார்.[33]

இலக்கண நூலார் தருகின்ற மியா, மோ, மின் போன்ற வடிவங்கள்[34] தவறான பிரிப்பினால் (wrong segmentation) பெறப்பெற்றனவே யாகும்.

வரலாற்றுப்போக்கில் 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்று

தொல்காப்பியனார் காலத்தில் 'செய்யும்' என்னும் வினைமுற்று ஆண், பெண், ஒன்றன், பலவின் ஆகிய பால்களில் மட்டும் வழங்கி நிகழ்காலத்தைக் குறித்துநின்றது. முக்காலத்தும் ஒத்தியல் பொருளைச் செப்பவும் பயன்பட்டது. அக்காலத்திலே அவ்வாய்பாட்டு முற்றுக்கள் பல இடம், எண்-பால் உருபன்களை ஏற்றுத் தம்மைக் குறிப்பிட்ட இடம், பால்-

---

32. டாக்டர். வரதராசனார், மு., மொழியியற் கட்டுரைகள் (1954), பக். 215-252.

Vide The Grammatical Structure of Dravidian Languages (1954), pp. 57, 58—Jules Bloch.

33. Dr. Caldwell, R., A Comparative Grammar of Dravidian Languages (3rd, ed., 1956), p. 533,

34. தொல். சொல். 274, 224, 451; தொல். எழு. 34, 224; நன்னூல், 440, 336, 337.

களுக்கு வரையறை செய்துகொள்ளத் தொடங்கின என்று கருத, முன்னர்க் காட்டப்பட்டிருக்கும் சொற்கள் இடந்தரு-கின்றன. அவ்வாறு இடம், பால்களுக்குத் தம்மை வரை-யறை செய்துகொண்ட முற்றுக்கள் பெரும்பாலும் எதிர்காலங் குறித்து வழங்கின என்பதற்குத் தொல்காப்பியத்தில் கிடைக்-கும் சான்றுகளும், சங்க இலக்கியச் சான்றுகளும் உறுதியளிக் கின்றன. சங்க இலக்கியங்களில் 'செய்யும்' என்னும் வினை-முற்றுக்கள் பெரும்பாலும் எதிர்காலத்தின்கண்ணே தான் வழங்கப் பெறுகின்றன. காலஞ்செல்லச் செல்ல அவற்றின் வழக்கு நிகழ்காலத்தைவிட எதிர்காலத்தில் செல்வாக்கு பெற்றுவிட்டது. நிகழ்காலத்தில் ''கிறு, கின்று, ஆநின்று'' போன்ற இடைநிலைகள் அமைந்த சொல் வடிவங்கள் தோன்-றலாயின. எனவேதான் கி. பி. 12-ம் நூற்ருண்டினராகக் கரு-தப்படும் நன்னூலார் ''செய்யு நிகழ்பெதிர்வும்'' எனக் குறிப்-பிட்டுள்ளார். அவர் காலத்தில் இவ்வாய்பாட்டு முற்றுக்கள் எதிர்காலத்தின்கண் மட்டுந்தான் பயின்றிருக்க வேண்டும். எனினும் அவர்தம் முதனூலாம் தொல்காப்பியத்தைக் கவ-னித்தும், சங்க இலக்கியங்களில் நிகழ்காலத்தில் வழங்க வேறு சொல் வடிவங்கள் இல்லாக் குறையினைக்கண்டும் அதனை நிகழ்-காலத்துக்கும் உரியதாகக் குறிப்பிட்டிருக்கவேண்டும் என்று கருத அவர் கால இலக்கியச் சான்றுகள் இடந்தருகின்றன.

இக்காலத் தமிழில் இவை ஒன்றன்பால், பலவின்பால் ஆகியவற்றில் மட்டும், அதுவும் எதிர்காலத்தில்தான் வழங்கு-கின்றன. [35]

---

35. பண்டைத் தமிழில் உம்/ம் காலக்குறியீடாக வழங்கிய இடங்களில் இக்காலத்தில் வ்/ப் வழங்குதல் காணத் தகுந்தது-

எ-டு.

| பண்டைத் தமிழ் | இக்காலத் தமிழ் |
|---|---|
| உண்மார் | உண்பார் |
| கொண்மார் | கொள்வார் |
| என்மர் | என்பர் |
| காணுமோர் | காண்போர் |
| கொய்யுமோன் | கொய்வோன் |

இவற்றேடு டாக்டர் மு. வரதராசனர் ''வ், ப் என்ற இரண்டும் உம் என்னும் இடைச்சொல்லின் திரிபே'' என்று கூறுவதும் ஒப்பு நோக்குந்தன்மையது- மொழி நூல், ப. 215.

எ-டு. அது வரும்; அவை வரும்.

சில இடங்களில் பேச்சு வழக்கில் பயிலும் அண்ணன் வரும், அக்காள் வரும், அப்பாவும் அம்மாவும் வரும் போன்ற வழக்குகள் இக்காலத்தில் இலக்கணத் தவறுடையனவாகக் கடியப்படுகின்றன.

முடிவுரை :

இக்கட்டுரை பண்டைக்காலத்தில் இறப்பு, இறப்பன்மை ஆகிய இருகாலப் பிரிவுகள்தான் தமிழ் மொழியில் சிறப்பிடம் பெற்றிருக்கவேண்டும் என்பதையும், 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று 'செய்யும்' வாய்பாட்டுப் பெயரெச்சம், ஏவல் வினைமுற்று ஆகியவற்றிலிருந்து வேறுபட்டது என்பதையும், 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்றினின்று தோன்றிய பிறசொல் வடிவங்களையும், அவ்வாய்பாட்டு வினைமுற்று காலப்போக்கில் அடைந்துள்ள வழக்கு வேறுபாடுகளையும் விளக்குவதோடு பண்டைக் காலத்தில் மேற்கொண்டுள்ள பல பிறழ்பிரிப்புக்களை உணர்ந்து கொண்டு திருத்தம் செய்யவும் வழிகாட்டுகின்றது.

# ஏவல் வினையில் வினாவின் ஆற்றல்

முன்னிலையும் ஏவலும்

தொல்காப்பியனார் முன்னிலை வினையையும் ஏவல் வினையையும் வேறுபடுத்திக் காட்டவில்லை. (தொல். சொல். 223, 224) ஏவல் என்னும் சொல்லை அவர் பயன்படுத்தி உள்ளார். தொ. எ. 210, 224) எனினும், ஏவலில் வரும் வினைகள் யாவை எனக் குறிப்பிட்டிலர். நன்னூலார் ஏவல் வினையை முன்னிலை வினையினின்று ஓரளவு வேறுபடுத்தி உள்ளார். (நன்.335-337).

ஏவல் முன்னிலையில் மட்டுமே வழங்கும். ஏவலில் ஒருமை, பன்மை வேறுபாடும் உண்டு. பண்டைக்காலத்தில் செல், வா, போ என்ற பல சொற்களும் (தொ. சொ. 450) உண்ணுதி, உண்டி போன்ற இகர விகுதி பெற்ற சொற்களும் (தொ.சொ. 223) ஒருமையிலும், முன்னிலை அசையினை ஏற்று. உம்/ம் விகுதி பெற்ற சொற்கள் பன்மையிலும் ஏவலாக வழங்கின.

இன்றைய பேச்சு வழக்கில் செல், வா, போ, என்பன போன்ற சொற்கள் ஒருமையிலும், வாரும், செல்லும், வாருங்கள், செய்யுங்கள் என்பன போன்ற சொற்கள் பன்மையிலும், உயர்வு ஒருமையிலும் வழங்குகின்றன.

வினாவும் ஏவலும்

பொதுவாக மக்கள் மனம் பிறர் ஏவுவதை விரும்புவதில்லை; அது ஏவலேயாயினும் அன்போடும், பணிவோடும் கூறப்பட வேண்டுமென எதிர்பார்க்கிறது. ஆகவே மக்கள் பேச்சு வழக்கில் ஏவலை அடிக்கடி கட்டளையாகக் கூறாமல்

தமது விருப்பத்தைத் தெரிவிக்கும் முறையில் மாற்றி அமைத்துக்கொள்ளுகின்றனர். எடுத்துக்காட்டாக ''நாளை வா'' என்பதற்குப் பதிலாக ''நாளை வாயேன்'', ''நாளை வருகிருயா?'' என்றெல்லாம் கூறுகிறோம். இவை விஞவாக உள்ளன எனினும் தாம் விரும்பிய ''வா'' என்னும் ஏவலைக் குறித்து நிற்கின்றன; இவற்றை '' மறைவான ஏவல் '' எனலாம். எனவே, விஞ ஏவலில் வெளிப்படையான கட்டளையை மறைத்து, மறைமுகமாக ஒருவர் தாம் விரும்பும் ஏவலைத் தெரிவிக்கப் பயன்படுகிறது.

''வாயேன்'' என்பதை ''வா'' என்ருல் போதும்; எனினும் 'ஏன்' என்னும் விஞவைச் சேர்த்து அன்பு நிறைந்த ஏவலாக மாற்றி விடுகிரேம். அப்படியே ''வாரும்'', வாருங்கள்'' என்ருல் போதும்; ஆனுல் ''வாருமேன்'', ''வாருங்களேன்'' என்று கூறுகின்ரேம்.

ஏவலோடு விஞவை இணைத்துத் தாம் விரும்பும் ஏவலை அன்போடு தெரிவிக்கும் இத்தகைய வழக்கு சங்ககாலத்திலேயே காணக்கிடக்கின்றது. இலக்கண நூலார் இத்தகைய வழக்குகளில் சிலவற்றை விளக்க இயலாது இடர்ப்படுகின்றனர்.

இங்கு, இலக்கண ஆசிரியர்கள் ஆ, ஓ, ஏ, யா, எ ஆகியவற்றை விஞக்குறிகள் எனத் தெளிவுபடுத்தி உள்ளனர் (தொல். எழு. 32, 178; சொல். 256, 257, நன்.67 )என்பது குறிப்பிடத்தக்கது.

1. மின்

தொல்காப்பியனுரும், நன்னூலாரும் 'மின்' என ஒரு முன்னிலை விகுதியைக் குறிப்பிட்டுள்ளனர். (தொ.சொ. 224; நன்.337.) நன்னூலார், ''மின் அவற்றேவல்'' எனக் குறிப்பிட்டு அதனை ஏவல் என்றும் தெளிவுபடுத்திக் காட்டுகிருர். 'மின்' விகுதிக்கு எடுத்துக்காட்டாக உண்மின், சென்மின் என்பனவற்றை உரையாசிரியர்கள் தருகின்றனர்.

தொல்காப்பியனார், நன்னூலார் போன்ற இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடாது போயினும் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு ஏவல்கள் சங்ககாலத்திலேயே வழங்கி உள்ளன என்பதை எவரும் மறுத்தல் இயலாது. அவர்கள் விகுதிகளைக் குறிப்பிடுங்கால் 'உம்' என்பதை ஏவல் பன்மை விகுதியாகக் குறிப்பிட்டிருக்கலாம். ஆனால் அதனைக் குறிப்பிடாது விட்டு விட்டனர்.

உண்ம் (புறம்.178), கொண்ம் (புறம்.159), தின்ம் (புறம். 150), வாரும் (பரி. 15), கொள்ளும்(கலி. 132)என்பன போன்ற சொற்கள் பல சங்ககாலத்தில் ஏவலில் வழங்கி உள்ளன. இவற்றில் சில இக்கால வழக்கில் உண்ணும், கொள்ளும், தின்னும் என்று வழங்கும் சொற்களின் உகரம் கெட்ட உருவமேயாகும்.

மேலும், சேர்மின் (புறம். 9), உண்மின், சென்மின் போன்ற சொற்கள் பல சங்ககாலத்தில் ஏவற்பன்மையில் வழங்கி உள்ளன.

இக்காலத் தமிழில் நீர் செய்யும், நீர் செய்யுமேன் என்பன போன்ற ஏவல் வினைகள் பயன்படுத்தப்படுகின்றன.

செய்யுமேன் > செய்மேன் > செய்மே.

சேய்மேன் >செய்மின் என மாற்றம் அடைந்து வழங்கி இருக்கலாம் எனக் கருதவும் இடமுண்டு. செய்யுமேன் என்னும் வினையில் ஏவல் குறித்து நிற்பதும் 'உம்' விகுதியேயாகும். 'ஏன்' வினாக்குறி. அதுவே என் என்று மாறிப் பின்னர் இன் எனத்திரிந்திருக்கலாம். எனவே சென்மின், உண்மின் என்பன.

| | |
|---|---|
| செல்—உம்—ஏன் | உண்—உம்—ஏன் |
| > சென்ம்—ஏன் | > உண்ம்—ஏன் |
| > சென்மேன் | > உண்மேன் |
| > சென்மின் | > உண்மின் |

என்ற படிகளை அடைந்து அந்த உருவங்களை அடைந்திருக்கலாம்.

"உம்" ஏவல் பன்மை விகுதியாம். இன் (<என் <ஏன்) வினைக்குறி ஏவலை அன்புடன் தெரிவிக்கப் பயன்படுகிறது. "மின்" என்னும் வடிவம், இலக்கண நூலார் "உம்" என்பதைப் பன்மை விகுதியாகக் கண்டு கொள்ளாததால், பிறழ்பிரிப்பினால் (Metanalysis) கொண்ட தவறான விகுதியேயாகும்.

2. சின்

இலக்கண நூலார் "சின்" என்னும் ஒரு அசைநிலையைக் குறிப்பிட்டுள்ளனர். தொல்காப்பியனார் "சின்" அசைநிலையை முன்னிலைக்குச் சிறப்பாகக் கூறிப், பின்னர் மூவிடங்களிலும் வழங்கும் (தொல்.சொல் 274,275) என்கிறார். நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவர் அதனை மூவிடங்களுக்கும் உரிய அசைநிலையாகக் குறிப்பிடுகின்றார் (நன். 441). சங்க இலக்கியங்களிலும் இது மூவிடங்களிலும் வழங்குகின்றது. இதன் வடிவம் "சின்" அன்று "இசின்" ஆகும் என்பதை நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டுகிறார். இதன் வடிவம் "இசின்" என்பதை உரையாசிரியர் தரும் எடுத்துக்காட்டுக்களை நோக்குவார் எளிதில் உணர்ந்து கொள்ளுதல் இயலும்.

இது தன்மை, படர்க்கை இடங்களில் இறந்த காலத்திலும், முன்னிலையில் பெரும்பாலும் ஒருமை ஏவலிலும், சில இடங்களில் இறந்த காலத்திலும் வழங்குதலைச் சங்க இலக்கியங்களில் காணலாம். அவற்றுள் இவண் யாம் விளக்கப்புகுவது ஏவல் ஒருமையில் வழங்கும் சில வடிவங்களேயாகும். வந்திசின் (புறம்.125) உரைத்திசின் (குறு.63) என்னும் சொற்கள் முன்னிலை ஏவல் ஒருமையில் வழங்குகின்றன. அவைகளைப் பிரிப்பின் வந்து-இசின், உரைத்து-இசின் எனக்கொள்ளலாம். 'இசின்' என்பதன் பழமை யாது எனக் கவனிப்போம். இது ஈ என்னும் அடிச்சொல்லைக் கொண்டு ஈகு (+ஏன்) என வழங்கிய துணை வினையாக இருக்கலாம்.

இக்காலத்தில் தந்திடேன், வந்தருளேன், செய்திடேன் எனத் துணை வினையை ஏவலில் அமைத்துக் குறிப்பிடும் பழக்கம்

உள்ளது. எனவே வந்திசின், உரைத்திசின் என்ற சொற்கள் மிகப் பழங்காலத்தில் வந்தீகேன், உரைத்தீகேன் என வழங்கி இருக்கலாம். வந்து, உரைத்து என்பவற்றிலுள்ள -ந்த்-, -த்- என்பன இங்கு இறந்த காலங்காட்டுதல் இல்லை[1]. ஈ என்னும் அடிச்சொல் ஏவலில் வழங்கும் என டாக்டர் சதாசிவம் அவர்களும் குறிப்பிடுகின்றனர்[2]. -கு- என்பது, ஆகு நோகு என்பனவற்றில் வருகின்றது போன்ற சொல் துணைஉருபு (formative suffix) ஆகும். இன் என்பது ஏன் என்பதன் திரிபாகும். ஏன் என்னும் வினைக்குறி இங்கும் ஏவலை அன்போடு தெரிவிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதன் வடிவம் காலப்போக்கில் மாறிவிட்டது. இன்று இலக்கண நூலார் தவருகப் பிரித்து நமக்குச் 'சின்' என ஒரு அசைநிலையைத் தந்துள்ளனர்.

வந்து — ஈ (கு) — ஏன்
> வந்து — இகு — ஏன்
> வந்து — இசு — ஏன்
> வந்து — இசென்
> வந்து — இசின்
> வந்திசின்

ஈ- துணைவினையடிச்சொல்; கு — முன்னர் விளக்கப்பட்டது. ஈ- > இ, என்ற மாற்றம் ஒப்புமையாக்கத்தால் ஏற்பட்டிருக்கலாம். ஏனெனில் பெரும்பாலான துணைவினைகள் குறுகிய உயிரோடு தொடங்குகின்றன. எ-டு அருள், இடு, விடு, இரு;

---

1. தமிழ் மொழியில் வினையெச்சங்களில் உள்ள காலக் குறியீடுகள் (Tense marker) அவை குறிக்கின்ற காலம் அச்சொற்கள் கொண்டு முடிகின்ற சொற்களின் காலத்தைப் பொறுத்ததேயாகும். அதாவது, வினையெச்சம் முடிக்கும் சொல் எதிர்காலத்தது அல்லது ஏவலாயின் வினையெச்சத்தின் காலம் எதிர்காலத் தொடர்புடையதாய் அமையும்.
2. Dr. Sathasivam, A., (1858).
The Suffix "Cin" in Cankam Tamil,
Tamil Culture, Vol. VII 140 — 149.

கு > சு அண்ணவினமாதல் (Palatalization); முன்னர் உள்ள அண்ணவின உயிரின் ஆற்றலால் மாறி இருக்கலாம். ஏன் > என் > இன் என மாற்றம் அடைந்திருக்கலாம்.

ஈ (கு) என்னும் துணைவினை (auxiliary verb) இப்பொழுது வழக்கிறந்து விட்டது. சின் (> இசின் < ஈகு-ஏன்) அசை நிலை என்று கூறும் நூற்பாவில், நன்னூலார் இருந்து, இட்டு போன்ற துணைவினைகளை அசைநிலைகள் எனக்கூறுவதும் (நன். 441) இம்முடிவை உறுதிசெய்து நிற்கின்றது.

3. மியா[3]

இதனை முன்னிலை அசைச்சொல் என இலக்கணநூலார் (தொல்.சொல்.274; நன். 446) குறிப்பிடுகின்றனர். இதன் வழக்கிற்கு எடுத்துக்காட்டாகக் கேண்மியா, சென்மியா என்ப-வற்றைக் கூறலாம். மியா என்னும் அசைநிலை பெற்ற சொல் வழக்கு சங்க இலக்கியத்திலோ பிற்கால இலக்கியங்களிலோ நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

தொல்காப்பியனரே இதனை ஓர் இடத்தில் "ஏவல் குறித்த உரையசை மியா" (எழு. 224) என்று குறிப்பிடுவதினின்று இவ் வுறுப்புடன் வழங்கும் சொற்கள் ஏவலைக் குறித்து நிற்கின்றன என்பது தெளிவு. முதன் முதல் இது பன்மையில் வழங்கிப் பின்னர் உயர்வு ஒருமையில் (Honorific singular) இடம் பெற்றிருக்கலாம் எனக் கருதுதல் தகும்.

முன்னர் விளக்கியபடி கேண்மியா, சென்மியா என்னும் சொற்களின் அமைப்பைப் பின்வருமாறு தெளிவுபடுத்தலாம்.

| | |
|---|---|
| கேள்—உம்—யா | செல்—உம்—யா |
| > கேளும்—யா | > செல்லும்—யா |
| > கேண்ம்—யா | > சென்ம்—யா |
| > கேண்மியா | > சென்மியா |

---

3. மோ. இசரயேல் (1964),
"மியா" ஒரு அசைச்சொல்லா அன்றே ?,
தமிழ்ப் பொழில், துணர், 40 மலர் 2. 4 — 8

இங்கு உள்ள யா விறைக்குறியே ஆகும்.[4] கேளும், செல்லும் என்று கூறுவதைவிட கேண்மியா, சென்மியா என்று கூறுவதில் ஏவலை அன்போடு வெளிப்படுத்த முடிகிறது.

மியா (யா) முன்னிலையில் வரும் என்று குறிப்பிட்டிருப்பதும், தொல்காப்பியனார் அது எவல்குறிக்கும் என்று புலப்படச் செய்வதும் 'உம்' என்னும் ஏவற் பன்மை விகுதி அல்லது அதன் வேறுபட்ட வடிவம் அங்கு உள்ளது என்பதை ஆய்வாளர் அறிந்து கொள்ளச் செய்யும். எனவே மியா (ம்+யா) ஒரு அசை நிலை அன்று என்பதும் தெளிவாகின்றது.

4. மோ

'மோ' என்பது ஒரு முன்னிலையசைச் சொல் என இலக்கண நூலார் (தொ.சொ. 274; நன். 446) குறிப்பிட்டு உள்ளார்கள். இது முன்னிலையில் வழங்கும் என்பது அவர்கள் கூற்றுலேயே தெளிவாகின்றது. இவ்வுறுப்பு உரைமோ (ஐங். 66) சென்மோ (புறம். 33) உள்ளுமோ (புறம். 48) மொழிமோ (குறு. 2) என்னும் சொற்களில் வழங்கக் காணலாம். இச்சொற்களிலும் 'உம்' ஏவற்பன்மை விகுதியாக உள்ளது. 'ஓ' விறைக்குறி ஏவலை அன்புடன் உணர்த்தப் பயன்படுகின்றது.

பிறழ் பிரிப்பாலேயே ''மோ'' என்பதை இலக்கண நூலார் அசைச் சொல் எனக் கொண்டிருக்கலாம். இவ்வுறுப்புடன் வழங்கும் சொற்கள் ஒருமையில் வழங்கினும் உயர்வு ஒருமையைக் குறிப்பனவே யாகும்.

| | |
|---|---|
| செல் — உம் — ஓ | உள் — உம் — ஓ |
| > செல்லும் — ஓ | உள்ளும் — ஓ |
| > சென்ம் — ஓ | உள்ளுமோ |
| > சென்மோ | |

4. டாக்டர் மு. வரதராசனார் (1654), மொழியியற்கட்டுரைகள். பக். 250.

5. ஏ

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே
(தொ. சொ. 451)

இந்நூற்பாவை நன்னூலார் அப்படியே எடுத்தாளுகின்றார். எனினும் தொல்காப்பியனார் இதனை 'எச்சவியலில்' கூறியது போன்று நன்னூலார் அதற்கு ஒப்பான 'பொதுவியலில்' கூறாது, முன்னிலையொருமை விகுதிகளைக் கூறும் நூற்பாவுக்கும், முன்னிலைப் பன்மை விகுதிகளைக் கூறும் நூற்பாவுக்கும் இடையில் (நன். 336) வைத்துள்ளார். உரையாசிரியர்கள் அதனை ஏவலைப்பற்றிக் கூறும் நூற்பாவாகவே கருதுகின்றனர்.

தொல்காப்பியனார் 'முன்னிலை' என மட்டும் கூறினார் ஒருமையா பன்மையா எனத் தெளிவுபடுத்தவில்லை. சங்கர நமச்சிவாயர் 'முன்னிலை ஏவல் முற்று' எனக் குறிப்பிடுகிறார். இளம்பூரணர் ஈ, ஏ என்னும் இடைச்சொற்கள் முன்னிலைக்கண் ஆனவை என்கிறார். இவண் ஆராய்வது முன்னிலைக்கண்வரும் ஏகாரம் பற்றியேயாம். அதன் வழக்கிற்கு உரையாசிரியர்கள் சென்மே, நின்மே என்னும் எடுத்துக்காட்டுகளைத் தருகின்றனர். சங்க இலக்கியங்களில் செய்ம்மே (புறம். 46), களைமே (புறம். 145), பிரிமே (ஐங். 308) என்னும் பல எடுத்துக்காட்டுக்களைக் காணலாம்.

இவைகளிலும் ஏவற்பன்மை விகுதி 'உம்' உயர்வு ஒருமையில் வழங்குதல் காணத்தக்கது. ஏ முன்னிலை இடைச்சொல் அன்று; வினாக்குறியே ஆகும்; ஏவலை அன்புடன் தெரிவிக்கப் பயன்படுகிறது.

| | |
|---|---|
| செய் — உம் — ஏ | பிரி — உம் — ஏ |
| > செய்யும் — ஏ | > பிரியும் — ஏ |
| > செய்ம் — ஏ | > பிரிமே |
| > செய்ம்மே | |

முடிவு

எனவே, என், யா, ஓ, ஏ என்னும் வினுக்குறியீடுகள் ஏவல் வினைகளில் இணைக்கப்படுதல் தமிழ்மொழியில் காணப்படும் ஓர் இயல்பு. அங்ஙனம் இணைக்கப்படுங்கால் அவ்வேவல் வினைகளின் கட்டளைத்தன்மை குறைக்கப்படுகிறது. தாம் விரும்பும் ஏவலை அன்போடு தெரிவிக்க ஏவல் வினைகளோடு வினுக்குறியை இணைப்பது தமிழ் மரபாகும். அவ்வாறு இணைத்து ஏவலைத் திருந்திய (பண்பட்ட) முறையில் தெரிவிக்கும் பழக்கம் இன்றும் உள்ளது.

சங்ககாலம்

| | | | |
|---|---|---|---|
| 1. | உண்—உம்—என் | > உண்ணுமேன் | > உண்மின் |
| 2. | வந்து—ஈ(கு)—என் | > வந்தீகேன் | > வந்திசின் |
| 3. | கேள்—உம்—யா | > கேளும்யா | > கேண்மியா |
| 4. | சேர்—உம்—ஓ | > சேருமோ | > சேர்மோ |
| 5. | செய்—உம்—ஏ | > செய்யுமே | > செய்மே |

இக்காலம்

| | | |
|---|---|---|
| 1. | வா—என் | > வாயேன் |
| 2. | வாரும்—என் | > வாருமேன் |
| 3. | வாருங்கள்—என் | > வாருங்களேன் |




## வியங்கோள் வினைமுற்று

தமிழில் வழங்கும் வினை வகைகளுள் (modals) வியங்-கோள் வினைமுற்று ஒன்றாகும். தொல்காப்பியனார் எழுத்ததி-காரத்தின் உயிர் மங்கியலில் அகரவீற்றுச் சொற்களின் புணர்ச்சியைக் கூறுங்கால்,

ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும் (தொ. எ.210)

இயல்பாகப் புணரும் என்கின்றார். அடுத்த நூற்பாவில்

வாழிய என்னுஞ் செயவென் கிளவி
இறுதி அகரம் கெடுதலும் உரித்தே (தொ. எ.211)

என்று கூறுகின்றமையால் 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் அகர இறுதி உடையது என அறிதும். தொல்காப்பி-யனார் வியங்கோளினையும் 'செய' என்னும் சொல்லினையும் அகர இறுதியுட் கூறியுள்ளாராயினும், வியங்கோள் ககர இறுதி யுடையது; செயவென்கிளவி அகரவிறுதிடையது என்பார் உளர்.

சொல்லதிகாரத்தின் வினையியலில் அவர் இருதிணைப் பொது வினைகளைத் தொகுத்துச் சொல்லுங்கால்

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
...... .. ......... ......... .........
......... ......... ......... .........
......... ......... ......... .........
இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய

(தொ. சொ. 222).

என்று வியங்கோளினையும் அதனுள் சேர்த்துக் கொள்கின்றார். தொடர்ந்து அவர் முன்னிலையில் மட்டும் வழங்கும் முன்னிலை வினைகளை இரண்டு நூற்பாக்களில் கூறிப் பின்னர்

எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே
(தொ. சொ. 225)

என்னும் நூற்பாவில் எஞ்சிய விரவுவினைகள் ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கும் என்று குறிப்பிடுகின்றார். அடுத்த நூற்பாவில் அவர்

அவற்றுள்,

முன்னிலை தன்மை ஆயி ரிடத்தொடும்
மன்னா தாகும் வியங்கோள் கிளவி
(தொ. சொ. 226)

என்று கூறி வியங்கோட்கிளவி முன்னிலை தன்மை ஆகிய இரு இடங்களிலும் 'மன்னாதாகும்' என்கின்றார்.

எழுவாய் வேற்றுமை ஏற்கும் பயனிலைகளைப் பற்றிப் பேசும் ஆசிரியர்

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே
(தொ. சொ. 66)

என்று கூறி வியங்கோள் வினைமுற்று பயனிலையாக வழங்கும் என்கின்றார்.

எ—டு. ஆ செல்க, அரசன் வாழ்க

திணை—பால், எண் காட்டும் வினைமுற்றுக்களினின்று வியங்கோள் வினைமுற்று வேறுபாடுடையது என்பதைக் குறிக்கும் முறையில்,

வியங்கோள் எண்ணுப்பெயர் திணை விரவு வரையார்
(தொ. சொ. 45)

என்று கூறுகின்றார் தொல்காப்பியனார். இங்கு அவர் வியங்கோள்வினை உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணைப் பெயர்களும் எண்ணி வரும்போதும் தொடர்ந்து வர இடந்தருகின்றார்.

எ—டு. ஆவும் ஆயனும் செல்க.

மேலும் அவர் வினைகள் ஏற்கும் அசைகளை இடையியலில் கூறுகின்றபொழுது வியங்கோள் வினைமுற்று முன்னிலை வினைச்சொல்லினின்று வேறுபட்ட அசை நிலையை ஏற்கும் என்பதை

மாவென் கிளவி வியங்கோள் அசைச்சொல்
(தொ. சொ.273)

என்று குறிப்பிடுகிறார்.

எ – டு. உப்பினின்று புற்கை யுண்கமா கொற்கையோனே
ஓர்கமா தேர்மணிக் குரலே.

வியங்கோட் பொருள்

தொல்காப்பியனார் காலத்தில் வியங்கோள் எப்பொருளில் வழங்கியது என்பது குறித்துப் பல அறிஞரும் பலவாறுகக் கருதுவர். வியங்கோள் வினைபற்றிக் கூறும் வினையியலில் அதன் பொருள்பற்றிக் கூறப்படவில்லை. ஆனால் தொல்காப்பியனார் எழுத்ததிகாரத்தில் 'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவி' என்று குறிப்பிடுவதனின்று வியங்கோள் ஏவல் கண்ணிய வினையேயாகும் என்று ஆசிரியர் கருதுகின்றார் என்று கொள்ளலாம். 'கண்ணிய' என்பது குறித்த என்ற பொருளை உடையது. எனவே வியங்கோள் ஏவலன்று; ஏவலைக்கருதிய வினையேயாகும்.

'ஏவலைக் கருதிய வியங்கோளாகிய வினைச்சொல்லும் ஏவலைக் கண்ணாத வியங்கோளும். என்று இளம்பூரணரும், 'செய்க, வருக இவை ஏவற்பொருண்மையை முற்ற முடித்தன; ஏவல் கண்ணிய எனவே ஏவல் கண்ணாதனவும் உளவாயின. அஃ-

றினை ஏவற்பொருண்மையை முற்ற முடியாதன' என நச்சினார்க்கினியரும் 'வியங்கோள் ஏவல் கண்ணியதும்; ஏவல் கண்ணாதது‌ம் என இருவகைத்து. ஏவல் கண்ணியதாவது உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல்;ஏவல் கண்ணாததாவது, இழிந்தான் உயர்ந்தானை இன்ன செய்யப் பெற வேண்டிக் கோடல்' எனக் கல்லாடனாரும் விளக்கம் தந்து வியங்கோளை இருவகைப்படுத்திக் காட்டுகின்றனர். ஆனால் தொல்காப்பியனார் ஏவல் கண்ணிய வியங்கோள் என்று குறிப்பிடுங்கால் இதனை வியங்கோளின் ஒருவகை என்று கருதினார் என்று கொள்ளச் சான்றுகள் இல்லை. எனவே ஏவலை விழைந்து குறித்தலை வியங்கோளின் விளக்கமாகவே ஆசிரியர். கொண்டார் எனக் கருதுவதே சாலப் பொருத்தமுடையதாகும் இதனையே இலக்கியச் சான்றுகளும் உறுதிப்படுத்துகின்றன.

'ஏவல் வியங் கொண்டு இளையரோ டெழுதரும்'(பதிற்.54) என்னும் பொழுது 'ஏவல் வியங்கொண்டென்றது, இளையரை முன்பு போர்க்குக் கையும் அணியும் வகுப்புழி ஏவித்தாமும் ஏவல்களைச் செய்து என்றவாறு' என்று பழைய உரைகாரர் குறிக்கின்றார்.

செல்கம் செலவியங் கொண்மோ (குறு. 114)

இவண் செலவியங் கொண்மோ என்பது போக விடுவாயோ என்ற பொருளில் வந்துள்ளது.

வினைகடைக் கூட்ட வியங்கொண்டான் (சிலம்பு. 9, 78)

கோவலன் வினைதூண்ட அதன் ஏவலை மேற்கொண்டான் என்ற பொருளில் வந்துள்ளது.

இவற்றையெல்லாம் ஒப்பிட்டுப் பார்த்தால் பிறரைத் தொழில் கொள்ள விழைதலே ஏவல் கண்ணுதல் எனவும் அதனை உணர்த்தும் வினைச்சொல் வியங்கோள் வினையாகும் எனவும் கொள்ளுதல் பொருந்தும். தொல்காப்பியனார் கால வியங்கோள் ஏவலை விழைந்து குறிக்கும் வினையாகும். காலப் போக்கில் வியங்கோள் வேண்டல், விதித்தல்,வாழ்த்தல், விழை-

தல் போன்ற வேறுபட்ட பொருள்களிலும் இடம் பெற்று விட்டது.

அஃறிணையில் ஏவல் கண்ணிய வியங்கோள்

நச்சினார்க்கினியர், தொல்காப்பியனார் 'ஏவல் கண்ணிய வியங்கோட்கிளவி' என்று குறிப்பிடுவதினின்று வியங்கோள் ஏவல் கண்ணாதனவும் உளவாயின என்கின்றார். அஃறிணை ஏவற் பொருண்மையை முற்ற முடியாதன என்கின்றார். மேலும் அவர் ''வியங்கோள் அஃறிணைக்கண் பெரும்பான்மையும் நிலை பெறாது, உயர்திணைக்கண் பெரும்பான்மையும் நிலை பெறும்'' எனக் கூறி ''அஃறிணை ஏவற் பொருண்மையை முற்ற முடியாது என்பது உணர்த்துதற்கு மன்னாதாகும் என்றார்'' எனப் புதுமையான விளக்கம் தருகின்றார்.[1] தொல்காப்பியனார்கால வியங்கோள் ஏவலை விழைந்து வெளிப்படுத்துவது என்று கண்டோம். எனவே, 'ஆவாழ்க' எனின் அஃறிணையாயினும் அது வாழ்த்துகின்றவனது விழைவைப் புலப்படுத்தி, எழுவாய் 'வாழ்' என்னும் தொழில் கொள்ளும்போது அவன் ஏவல் செயற்படுதலின் அஃறிணைக் கண்ணதாயினும் இதுவும் ஏவல் கண்ணிய வியங்கோளாம். எனவே தொல்காப்பியனார்கால வியங்கோள் எல்லாம் ஏவல் கண்ணியவையேயாம் என முடிக்குதும்.

வியங்கோளின் வழக்கு

தொல்காப்பியனார் எட்டுவகை விரவுவினைகளைத் தொகுத்துக் கூறிய பின்னர் முன்னிலையில் மட்டும் வழங்கும் முன்னிலை வினைமுற்றுக்களைப் பற்றிக் கூறினார். தொடர்ந்து அடுத்த நூற்பாவில் முன்னிலை ஒழித்த ஏனைய எழுவகை வினைச்சொற்களும் ஐம்பால் மூவிடத்தின் கண்ணும் வழங்கும் இயல்பின என்பதைத் தெளிவுபடுத்துகின்றார். அடுத்த நூற்பாவில் அவர்

1. நச்சினார்க்கினியர், தொல்காப்பியச் சொல்லதிகார உரை, ப. 228

அவற்றுள்,

முன்னிலை தன்மை ஆயி ரிடத்தொடும்

மன்னு தாகும் வியங்கோட் கிளவி (தொ. சொ. 226)

என்று கூறுவது எழுவகை விரவுவினைகளில் வியங்கோள் வினையின் வழக்கினை மேலும் வரையறை செய்வதாக உள்ளது.

தொல்காப்பியனார் 'மன்னுதாகும்' என்பதற்குச் 'சிறு-வரவின' என இளம்பூரணரும், 'அவ்விடத்தோடு சிறுபான்-மை வருதல் காண்க' எனச் சேனாவரையரும், 'அஃறிணைக்-கண் பெரும்பான்மையும் நிலைபெறாது; உயர்திணைக்கண் பெரும் பான்மையும் நிலைபெறும் எனவும், அஃறிணை ஏவற்பொருண்-மையை முற்ற முடியாது' என நச்சினார்க்கினியரும், 'நிலை பெறாது' எனத் தெய்வச்சிலையாரும் உரை கூறி உள்ளனர். கல்லாடனார் நிலைபெறாது என்று உரை கூறினும் 'சிறுபான்மை முன்னிலைத் தன்மைக் கண்ணும் வருமெனக் கொள்க' என விளக்கம் தருகின்றார்.

சங்க இலக்கியங்களிலும் வியங்கோள் வினை முன்னிலைத் தன்மையில் வழங்குதலைக் காணலாம்.

| | | |
|---|---|---|
| வாழியர் யான் | (புறம். 365) | தன்மை |
| பிரிக | (புறம். 71) | தன்மை |
| காண்க யாம் | (புறம். 160) | தன்மை |
| ஈக | (புறம். 289) | முன்னிலை |
| உண்க | (புறம். 319) | முன்னிலை |
| தணிக | (புறம். 70) | முன்னிலை |

தொல்காப்பியனார் வியங்கோள் வினையை மூவிடங்களி-லும் வழங்கும் எழுவகை வினைகளோடு சேர்த்துக் கூறிப் பின்னர் அது முன்னிலை, தன்மையில் 'மன்னாது' என்கின்ற-மையானும், சங்க இலக்கியங்களில் வியங்கோள்வினைபெரும்-பாலும் படர்க்கையில் வழங்கினும் தன்மை முன்னிலையில்

அருகிக் காணப்படுகின்றமையானும் பெரும்பான்மையான உரையாசிரியர்கள் 'மன்னாதாகும்' என்ற சொல்லுக்குச் 'சிறு-வரவின' என்ற விளக்கம் தருகின்றமையானும் வியங்கோள்-வினை தன்மை முன்னிலையில் வழங்குகின்றமைக்குத் தொல்-காப்பியனாரே ஓரளவு இடந்தருகின்றார் எனக் கருத இடமுண்டு.

சில ஆராய்ச்சி அறிஞர் தன்மை, முன்னிலையில் வியங்-கோள்வினை அமைந்துள்ள பாடல்கள் தொல்காப்பியனார் காலத்திற்குப்பின் இயற்றப்பட்டவைகளாக இருக்கலாம் என்று கூறுவது மிகப் பொருத்தமாகத் தோன்றவில்லை[2]. வேங்கட-ராசுலு ரெட்டியார் அகரவீற்று வியங்கோள் என்பது ககர வீற்-றினது என்று கூறி, ககர வீற்று வியங்கோளினையே தொல்காப்-பியனார் படர்க்கைக்கு உரியதாகக் கட்டுப்படுத்துகின்றார் என்-றும் ஏனைய ஈறுகளையுடைய வியங்கோள் வினைகள் தன்மை முன்னிலையில் வரலாம் என்றும் கருதுகின்றார்.[3] ஆனால் ககர வீற்று வியங்கோளும் தன்மை முன்னிலையில் வந்துள்ளமைக்குச் சங்க இலக்கியங்களில் சான்றுகள் உள்ளமையால் அவர் விளக்கம் ஏற்புடைத்தாகத் தோன்றவில்லை.

எனவே 'மன்னாது' என்பதற்கு நிலைபெறாது என்று பொருள் கூறி, அருகி வருதல் உண்டு; மிகுதியாக வழங்குதல் இல்லை என்று விளக்கங் கூறுவது தான் மிகப் பொருந்தும். ஏனெனில் முன்னிலையில் ஏவல் கண்ணிய வியங்கோளின் இடத்தில் நீ செல், நீ வாழ் போன்ற ஏவல் வினைகளும், தன்மையில் யான் வாழ்வல், யான் செல்வல் போன்ற வினைகளும் மிகுதியாக வழங்கின. தன்மையில் ஏவுதல் இல்லை. முன்னிலைக்கு ஏவல்

---

2. P. S.Sastri, A Commentary on Tolkappiyam Collati karam, p. 226

3. Venkatarajulu Reddiyar, V., Viyankol, AORM, IV (1939-1940), pp. 1-24

வினையுண்டு. எனவே படர்க்கையில் ஏவலை விழைந்து குறித்த வியங்கோள்வினை பெரும்பாலும் வழங்கி இருக்கலாம்.[4]

காலப் போக்கில் படர்க்கைக்கே சிறப்பாக அமைந்த வியங்கோள்வினை மூவிடங்களிலும் வழங்கலாயிற்று. எனவே தான் பிற்கால இலக்கண ஆசிரியர் நன்னூலார்,

> கயவொடு ரவ்வொற்று ஈற்ற வியங்கோள்
> இயலும் இடம்பால் எங்கு மென்ப (நன். 338)

என்று கூறி வியங்கோள் வினையினை மூவிடங்களுக்கும் பொதுமையானதாகக் கொண்டார்.

ஏவலும் வியங்கோளும்

தொல்காப்பியனார் ஏவல் வினையை முன்னிலை வினையினின்று வேறுபடுத்திக் காட்டவில்லை. அவர் ஏவற் பொருளை வேறு படுத்திச் சுட்டியிருப்பினும், வினையியலில் ஏவல் வினை என ஒருவகை வினையினைக் குறிப்பிடவில்லை. ஆனால் வியங்கோள் வினையை வினையியலில் வேறுபடுத்திக் காட்டியுள்ளார் என்று முன்னரே கண்டோம். தொல்காப்பியனார் காலத்தில் ஏவல் முன்னிலை வினையினின்று வேறுபடுத்தி அறியப்படவில்லை. ஏவல் வினை முன்னிலைக்கே உரியது. சங்க இலக்கியங்களில் ஏவல் வினையைக் காணுங்கால் அது கால வேறுபாடு

---

4. தெய்வச்சிலையார், தொல்காப்பியச் சொல்லதிகார உரை, ப.220

"வாழ் உண், தவிர் என்னும் ஏவல் குறித்த சொற்கள் தன்மைப் பெயர்க்கண்ணும், படர்க்கைப் பெயர்க்கண்ணும் ஏலாது முன்னிலையொருமைப்பெயர்க்கண், நீ வாழ், நீ உண், நீ தவிர் என ஏற்றலின், ஆண்டுப் பாலுணர்த்துஞ் சொல்லோடு ஒரு நிகரனவாகி முன்னிலை வினையுள் அடங்கின. அப் பொருட்கண் தன்மை கூறும் வழி, யான் வாழ்வல், தவிர்வல் எனக் கூற வேண்டலின் அவை தன்மை வினையுள் அடங்கின. இனிப் படர்க்கைக்கண் வருங்கால், அவன் வாழ்க, உண்க, தவிர்க எனக் ககரம் கடையாத்துக் கூற வேண்டுதலின் அவ்வாறு வருஞ்சொல் பாலுணர்த்தாமையின் வியங்கோள் என வேறு குறிபெற்றது."

உடையதன்று; ஆனால் எண் வேறுபாடு உடையது. முன்னிலையில் வழங்கும் செயல்வினை (indicative verb) கால வேறுபாடும் உடையது.

வியங்கோள் வினை படர்க்கைக்கே சிறப்பாக உடையது; தன்மையிலும் முன்னிலையிலும் சிறுபான்மை வரலாம். வியங்கோள் வினைக்கு எண் வேறுபாடு இல்லை. கால வேறுபாடும் இல்லை. திணை-பால் வேறுபாடும் இல்லை.

தொல்காப்பியனார் ஏவல் வினையை வேறுபடுத்திக்காட்டாவிடினும் பிற்கால இலக்கண நூலார் 'மின் அவற்றேவல்' (நன். 337) என்று குறிப்பிட்டு ஏவல் வினையை வேறுபடுத்திக் காட்டுகின்றனர். காலப்போக்கில் முன்னிலை வினை வேறு; ஏவல் வினை வேறு என்ற தெளிவான வேறுபாட்டு நிலை அமையத் தொடங்கி விட்டது.

ஏவல்-அன்பேவல்-வியங்கோள்

இலக்கண ஆசிரியர்கள் முன்னிலை அசைகள் எனச் சிலவற்றை இடையியலில் தொகுத்துக் கூறியிருப்பதைக் கூர்ந்து நோக்கி, அவை அமையும் சொற்களை ஆய்ந்து பார்க்குங்கால் அச்சொற்கள் ஏவல் குறித்த வினைகளாகவே அமைகின்றன என்பதை அறியலாம். அவற்றை ஏவல் வினைகள் என்றும் கூறலாம். ஆனால் முன்னிலையசைகளை ஏற்கின்ற அவ்வினைச் சொற்கள் ஏவலை அன்போடு உணர்த்துகின்றன. எனவே அவற்றை அன்பேவல் என அழைப்பது சிறப்பாகும். இவற்றிலும் கால வேறுபாடு இல்லை. முன்னிலை அசைகளாக அமையும் மியா (—யா), மோ (— ஓ), மதி (—தி), (— ஏ), சின் (இன் < என்) ஆகிய இடைச் சொற்கள் அடிப்படையில் வினைக் குறியீடுகளே. அவை ஏவலை அன்போடு உணர்த்த ஏவல் வினைகளில் ஆளப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| எ-டு. | கேண்மியா | கேள்— ம்—(இ)—யா |
| | மொழிமோ | மொழி—ம்—ஓ (குறு.2) |
| | கொடுமதி | கொடு—ம்—(அ)—தி (புறம்.163) |

நின்மே — நில்—ம்—ஏ (நற். 300)
வந்திசின் — வந்து—இ—(கு)இன் (புறம். 105)
சேர்மின் — சேர்—ம்—இன் (புறம். 9)

அன்பேவல் ஏவலை அன்புடன் வெளிப்படுத்தும் வினை; வியங்கோள் ஏவலை விழைந்து வெளிப்படுத்துவது. அன்பேவல் முன்னிலைக்கே உரியது; வியங்கோள் படர்க்கைக்கே சிறப்புடையது. அன்பேவல் அசைநிலை பெற்று வழங்கும்; வியங்கோள் விகுதிகள் பெற்று அமையும். அன்பேவல் எண் வேறுபாட்டுடன் அமைதல் உண்டு; வியங்கோளுக்கு அவ்வேறுபாடு இல்லை. இரண்டும் ஏவல் கண்ணியவைகளே; இரண்டும் கால வேறுபாடு உடையன அல்ல.

வியங்கோள் வினை விகுதிகள்

தொல்காப்பியனார் வியங்கோள் வினை விகுதிகளைப் பிரித்துக் கூறவில்லை. ஆனால் எழுத்ததிகாரத்தில் அகரவீற்றுப் புணர்ச்சியினைக் கூறுங்கால் "ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்" இயல்பாக முடியும் என்கின்றமையால் வியங்கோள் அகரவீற்றினைப் பெற்றியலும் என்பதை அவர் சுட்டிக் கூறியுள்ளார். இதற்கு உரையாசிரியர்கள் செல்க, வருக போன்ற எடுத்துக்காட்டுக்களைத் தருகின்றனர். தொல்காப்பியனார் அடுத்த நூற்பாவில்

வாழிய என்னும் செயவென் கிளவி
இறுதி அகரம் கெடுதலும் உரித்தே (தொ. எ. 211)

என்று கூறுகின்றார். இங்கு வாழிய என்னும் 'செய' என்னும் வாய்பாட்டுச் சொல் இறுதி அகரம் (ய) கெட்டு வாழி என்று நிலைபெறும் என்கிறார். இங்கு வாழிய என்னும் சொல் 'செய' என்னும் வாய்ப்பாட்டினது என்று கூறினாரே யொழிய அதனை வினையெச்சம் என்றோ வியங்கோள் வினைமுற்று என்றோ குறிப்பிடவில்லை.

தொல்காப்பியனார், அகரவீற்றுப் புணர்ச்சியைக் கூறுங்கால் வியங்கோள் வினையைச் சுட்டிச் சொல்லுகின்றமையால்

வியங்கோள் அவர் காலத்தில் அகர வீற்றினதாய்ப் பயின்றது எனலாம். எடுத்துக்காட்டாக வாழ, வாழிய, வாழ்க முதலியவற்றைத் தொல்காப்பியனார் கால வியங்கோள் வடிவங்களாகக் கொள்ளின் அ, இய, க என்பனவற்றை விகுதிகளாகக் கொள்ளலாம். ஆனால் இளம்பூரணர், தெய்வச்சிலையார் ஆகிய உரையாசிரியர்களும், பிற்கால ஆராய்ச்சியாளர் வேங்கடராசுலு ரெட்டியார் அவர்களும் தொல்காப்பியனார், கால வியங்கோள். ககர ஈறுடையது என்று விளக்கம் தருகின்றனர். தொல்காப்பியனார் மொழியில் முடிக (தொ. பொ. 48), ஓம்பல் (தொ. சொ-13.), ஒராஅல் (தொ. சொ. 443), ஆகியர் (தொ. பொ. 79) போன்ற சொற்கள் வியங்கோள் வினைகளாக ஆளப்பட்டுள்ளன. இவைகளில் முறையே க, அல், ஆல், இயர் ஆகியவை விகுதிகளாக அமைகின்றன.

உரையாசிரியர்கள் வியங்கோள் விகுதிகளைப் பகுத்துச் சொல்வதில் பல்வகையாக வேறுபடுகின்றனர். இளம்பூரணர், தெய்வச்சிலையார் ஆகிய உரையாசிரியர்கள் வியங்கோள் ககர விகுதியுடன் மட்டும் அமையும் என்கின்றனர். சேனாவரையர் க, யா, அல் ஆகிய விகுதிகளைத் தந்துள்ளனர். நச்சினார்க்கினியர் க, யா, அல், ஆல், அர், ஆர், மார், ஐ என்னும் விகுதிகளையும், கல்லாடனார் க, அர், ய, அல், ஆர், மார், ஐ ஆகிய விகுதிகளையும் தந்துள்ளனர். நன்னூலார் 'கயவொடு ரவ்வொற்று ஈற்ற' (நன். 338) என மூன்று விகுதிகளைக் குறிப்பிட்டுள்ளார்.

இலக்கண விளக்க ஆசிரியர்,

யவொடு கரல்வொற் றல்ஆல் உம்மார்
ஐகா னீற்ற வியங்கோள் முற்றவை
எய்து மிடம்பா லெங்கு மென்ப (இ. வி. 239)

என்று கூறி ய, க, ர், அல், ஆல், உம், மார், ஐ ஆகியவற்றை வியங்கோள் விகுதிகளாகத் தந்துள்ளார். கல்வெட்டுக்களில் கடவேன் ஆக, கடவீ ஆகவும், கடவீர் ஆகவும் போன்ற வினை

வழக்குகள் காணப்படுகின்றன. காலப்போக்கில் நாம் செய்வோமாக, நாம் செய்யக் கடவோம் போன்றவை உளப்பாட்டுத் தன்மைப் பன்மை அன்பேவலாக, அன்றேல் வியங்கோளாக வழங்கத்தலைப்பட்டுவிட்டன. மேலும் இக்காலத் தமிழில் வாழட்டும், சிறக்கட்டும், ஒழியட்டும், பெருகட்டும் போன்ற வியங்கோள் வினைகள் வழக்கில் அமைந்து புது விகுதிகளைப் பெற்றுள்ளன.

இவ்வாறு வியங்கோள் வினைகள், விகுதிகள் ஆகியவற்றைக் கொள்வதில் இலக்கண ஆசிரியர்களும் உரையாசிரியர்களும் மிகுதியும் வேறுபடுதல் ஏன்? பிற்கால இலக்கண ஆசிரியர்களும் உரையாசிரியர்களும் வியங்கோளுக்குத் தொல்காப்பியர் கூறிய இலக்கணத்தை அவர் நெறி நின்று தெளிந்து அவர் கொண்டபடியே கொண்டிருப்பின் இத்தனை இடர்ப்பாடுகளும் ஏற்பட்டிரா. எல்லோரும் வியங்கோள் பற்றி ஒரே பொது இலக்கணத்தைக் கொள்ளவில்லை எனலாம். ஒருவர் வியங்கோள் என்றதை மற்றவர் வியங்கோள் எனக் கருதவில்லை. ஒருவர் வியங்கோள் எனக் கருதாததைப் பிறர் வியங்கோள் எனக் கொண்டனர். மேலும் மொழி வளருந் தன்மையது. அது புதிய வழக்குகளைப் படைத்துக் கொள்ளலாம். பழைய வழக்குகளை இழந்தும் விடலாம். தமிழில் பல புதிய வியங்கோள் வினைகள் தோன்றியுள்ளன. இதுவும் வியங்கோள் வினை விகுதிகளைப் பற்றிய வேறுபாட்டிற்குக் காரணம் எனலாம்.

வியங்கோளும் 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சமும்

வியங்கோள் வினை தொடக்க நிலையில் 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தினின்றே வளர்ச்சி பெற்ற வடிவமாக அமைந்திருக்கலாம். இந்த நிலை தமிழில் மட்டுமன்று. தென் திராவிட மொழிகளிலும் குறிப்பாக மலையாளம், பழங் கன்னடம், துளு ஆகிய மொழிகளிலும் காணப்படுகின்றமைக்குச் சான்றுகள் உள. தமிழ் மலையாளத்தில் பல வினைச் சொற்களின் 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சமும் வியங்கோள் வினைமுற்றும் - க்க என்ற ஒரே விகுதியுடன் அமைகின்-

றன. எ—டு. உரைக்க, படைக்க. சில வினைகளின் 'செய' என்னும் வினையெச்ச விகுதி அகரமாக அமைய வியங்கோள் விகுதி ககரமாக அமைகின்றது. எ—டு. செய்ய, ஒழிய; செய்க, ஒழிக. இரண்டாம் வகையான வியங்கோள் வினைகளில் காணப்படும் ககர விகுதி முதல் வகையாக வினைகளின் வியங்கோள் விகுதியை ஒத்துக் காலப் போக்கில் தோன்றி இருக்கலாமோ என்று கருத இடமுண்டு.

எ-டு. ஒழிக்க (புறம். 216)
சிறக்க (புறம். 6)
மறந்தைக்க (கலி. 26)

எனவே, தொல்காப்பியனார் காலத்தில் வழங்கிய வாழிய, வாழி போன்ற வழக்குகள் காலப்போக்கில் வாழ்க என்று மாறி அமைந்திருக்கலாம். பழந்தமிழில் இய, இயர் ஆகிய விகுதிகளைப் பெற்ற வினைவடிவங்கள் வினையெச்சங்களாகவும் வியங்கோள் வினைமுற்றுக்களாகவும் ஆளப்பட்டுள்ளமை இதனை மேலும் உறுதி செய்கின்றது.

வினையெச்சம்

தன்கடன் இறீஇய போகிய காதலர் (குறு. 255)
பிணன் உணீஇயர் எருவை இழிய (பதி. 36)
மகளிர் தழை உடீஇயர் மரம்
மதித்த மாசுல் (அகம். 59)

வியங்கோள் வினைமுற்று

வாழிய (புறம். 9)
வாழியர் நீயே (அகம். 59)
நுங்கினை உணீஇயர் (பதி. 49)

பழந்தமிழில் இவ்வகையான வடிவங்கள் தொழிற் பெயர்களாகவும் ஆளப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

எ-டு. பசலை உணீஇயர் வேண்டும் (குறு. 27)
விழவிற் செலீஇயர் வேண்டும் (நற். 370)

வியங்கோள் வினை பற்றிய இலக்கண நூலார் கொள்கைகள், அதன் அமைப்பு, பொருள் வழக்கு, வியங்கோளுக்கும் ஏவலுக்கும் உள்ள தொடர்பு வேறுபாடு, வியங்கோளின் வரலாறு ஆகியவை இக்கட்டுரையின்கண் விளக்கப்பட்டுள்ளன.

## ‘மார்’ ஈற்று வினைச்சொற்கள்

### இலக்கண நூல்கள் தரும் செய்தி

‘மார்’ விகுதி பெற்ற பல வினைச்சொற்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. தொல்காப்பியம், நன்னூல் போன்ற இலக்கண நூல்களில் அவற்றின் இலக்கணம் கூறப்படுகின்றது. இந்நூற்களில் ‘மார்’ ஈற்றுச் சொற்கள் வினைமுற்றுக்கள் விகுதிகள் வரிசையில்தான் தொகுக்கப்பட்டுள்ளன. எனவே இலக்கண நூலார் ‘மார்’ விகுதி பெற்ற வினைச்சொற்களை எல்லாம் வினைமுற்றுக்கள் என்றே கருதினர் என்பது உரையாசிரியர், பிற்கால இலக்கண அறிஞர் பலர் முடிவு. ஆனால் தொல்காப்பியனார் ‘செய்கு’ என்னும் வாய்பாட்டு வினையைப்பற்றி,

> அவற்றுள்
> செய்கென் கிளவி வினையொடு முடியினும்
> அவ்வியல் திரியா தென்மனார் புலவர் (தொ.சொ.204)

என்று குறிப்பிட்டு அது வினைமுற்றின் இயல்பினின்று வேறுபடாது என்று வெளிப்படையாகக் கூறி உள்ளார். இஃது இவ்வாறிருக்க, அவர் ‘மார்’ விகுதிபெற்ற வினைகளைப் ‘பல்லோர் படர்க்கை’ என்றும் ‘காலக் கிளவியோடு முடியும்’ (தொ. சொ. 207) என்றும் கூறியுள்ளாரேயன்றி அவை வினைமுற்றின் இயல்பினின்று வேறுபடா என்று வெளிப்படையாகக் கூறவில்லை. நன்னூலாரும் இதே வகையில் ‘மார்’ விகுதி பெற்ற வினைகள் ‘பல்லோர் படர்க்கை’, ‘வினையொடு முடியும்’ (நன். 327) என்று மட்டும் குறிப்பிட்டு நின்று விடுகின்றார். இவை பல்லோர் படர்க்கை எனக் குறிப்பிடப்படுவதாலும், வினைமுற்று விகுதிகளை வகுத்துத் தொகுத்துச் சொல்லும்போது

'மார்' விகுதி கூறப்படுவதாலும் மாரீற்றுச் சொற்களை வினை-முற்றுக்கள் என்றே இலக்கண நூலார் கருதுகின்றனர் என்பது தெளிவு.

சங்க இலக்கியங்களில் 'மார்' விகுதி பெற்ற சொற்கள்

சங்க இலக்கியங்களைப் பார்வையிடுங்கால் ஏறத்தாழ எண்-பத்தேழு சொற்கள் 'மார்' விகுதியுடன் அமைகின்றன. அவற்றில் ஏழு சொற்கள் பெயர்களேயாகும்.

எ-டு. ஆய்மார் (புறம். 342)
தன்னைமார் (புறம். 342.15)
தோழிமார் (அகம். 48.5)

இவை போன்ற சில சொற்களில் 'மார்' பெயர்ச் சொல் விகுதி-யாக அமைந்தும் இலக்கண ஆசிரியர்கள் இதனைப் பெயர்ச்-சொல் விகுதியாகக் குறிப்பிடவில்லை.

உண்மையை ஆயின், ஒருசில சொற்கள்மட்டுமே 'மார்' விகுதியுடன் அமைந்து வினைமுற்றுக்களாக வழங்குகின்றன. அவற்றிலும் மிகுதியானவை எதிர்மறை வினைமுற்றுக்களாக அமைதல் அறிதற்பான்மையது.

எ-டு. 1. காமம் படரட வருந்திய
நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே
(நற்.64.13,14,)

2. ஐதக லல்குன் மகளிர்
நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யோனே
(புறம். 389.15, 16)

3. பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே
(புறம். 375.20, 21)

4. உலகத்து நிலவன் மாரோ புரவலர்
(புறம். 375.18)

5. செல்வர் அல்லர் நங்காதலர் செலினும்
நோன்மார் அல்லர் நோயே......... (நற்.208.5,6)

மாரீற்றுச் சொற்கள் ஒரேவிடங்களில் மிக அருகி வினை-யாலணையும் பெயர்களாகவும் வழங்குதலைக் காணலாம்.

எ-டு. 1. அஞ்சுவரு நெறியிடைத் தமியர் சென்மார்
நெஞ்சுண மொழிப மன்னே தோழி
(அகம். 157.9, 10)

2. நீதக்காய் தைந்நீர் நிறந்தெளிந்தா யென்மாரும்
(பரி. 11.115)

3. வேர்பிணி பன்மலர் வேயு மோரும்
(பரி. 12, 16)

சங்க இலக்கியங்களில் காணப்படும் எஞ்சிய மிகுதியான மாரீற்று வினைச் சொற்களும் வினையெச்சங்களாகவே வழங்கு-கின்றன. அவ்வாறு வினையெச்சங்களாக வழங்குகின்றவற்-றில் ஒரு சில தாம் தழுவும் வினைமுற்றுக்களோடு இயைபு (Concord) பெற்றும் சில இயைபுபெருமலும் அமைந்துள்ள-மையைக் காணலாம்.

இயைபுபெற்றவை

1. அரிய லார்கைய ரினிதுகூ டியவர்
துறைநனி மருத மேறித் தெறுமார் (பதிற். 27.5,6)

2. குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர் (அகம். 207.3,4)

3. கொடுங் குழாய் துறக்குந ரல்லர்
நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே
(கலி. 13.26,27)

இங்கு மாரீற்று வினையெச்சங்கள் தாம் தழுவும் வினை-முற்றுக்களோடன்றி, எழுவாய்ச் சொல்லோடும் திணை, பால், எண் ஆகியவற்றில் இயைபுபெற்றுள்ளமையைக் காணலாம்.

இயைபற்றவை

1. மாலை நனிவிருந் தயர்மார்
தேர்வரு மென்னு முரைவா ராதே (குறு. 155.6,7)

2. அவள்பழி நுவலு மிவ்வூர்
ஆங்குணர்ந் தமையினீங் கேகுமா ருளெனே
(குறு. 173.6,7)

3. விளங்குபுகழ் நிறுத்த இடம்பெருஞ் சென்னி
குடிக்கடன் ஆகலிற் குறைவினை முடிமார்
(அகம். 375.11, 12)

இங்கு மாரீற்று வினையெச்சங்கள் தாம் தழுவும் வினைமுற்றுக்களோடும் எழுவாய்ச் சொற்களோடும் திணை, பால், எண் முதலியவற்றில் இயைபு பெருமையைக் காணலாம்.

மாரீற்று வினைகளின் வரலாறு

தொல்காப்பியனுர்,

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப (தொ. சொ. 207)
ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே[1] (தொ. சொ. 7)

என்னும் நூற்பாக்களில் 'மார்' வினைமுற்று விகுதியாக அமையும் என்கின்ருர். எனவே தொடக்கநிலையில் 'மார்' ஈற்று வினைகள் வினைமுற்றுக்களாகவே வழங்கி இருத்தல் வேண்டும். அவை பெரும்பாலும் பெயரோடு முடிவுபெற்றன. அதுவே மிகப் பழமையான நிலை எனலாம்.

எ-டு. பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே
(புறம். 375.20, 21)

தெய்வச்சிலையார், "மாரீற்று வினைச்சொல்லும் பல்லோரை உணர்த்தும் படர்கைச் சொல்லாம். அது பெய-

1. இந்நூற்பாவில் 'மார்' ஈறு பெயர்ச் சொற்கும் உரித்தாகக் கொள்ளப்படும் கருத்து உளதாயினும் (இளம் பூரணர்; தொ. சொ. 10), அது பற்றிய ஆய்வு இவண் மேற்கொள்ளப் படவில்லை.

ரோடு முடிதலேயன்றி, வினையொடும் முடியும்''[2] என்று கூறு-வது மிகப் பொருத்தமாகத் தோன்றுகின்றது. மாரீற்றுச் சொற்கள் வினைமுற்றுக்களாக வழங்கும்போது மிகுதியும் பெயர்கொண்டே முடிவுற்றன என்பது தெளிவு. காலப்போக்கில் மாரீற்று வினைகள் மிகுதியாக வினையெச்சங்களாக வழங்கவே அந்த வளர்ச்சியையும் உட்படுத்தவே தொல்காப்பியனார் ''காலக்கிளவியொடு முடியும் என்ப'' என்று குறிப்பிடுகின்றார். இத்தொடருக்கு ஏனைய உரையாசிரியர்கள் எல்லாரும் பிறமுற்றுச் சொற்போற் பெயரொடு முடியாது,காலத்தை உணர்த்தும் சொல்லாகிய வினைச்சொல்லோடு முடியும்'' என்று உரை கூறத் தெய்வச்சிலையார் மாறுபாட்டுக் கூறுகின்றாராயின் அவர் ''காலக்கிளவியொடும் முடியும்'' என்று இடையில் 'உம்' இடைச்சொல் அமையப் பொருள் கொண்டு இருத்தல் வேண்டும். நூற்பாவின் சொற்களமைப்பில் 'உம்' அமையினும் அமையாவிடினும் புணர்ச்சியில் வேறுபாடின்று. ஆனால் பொருளில் வேறுபாடு உள்ளது. எனவே ஏனைய உரையாசிரியர்கள் எல்லாம் ''உம்'' இடைச்சொல்லைக் காணாதிருக்க, தெய்வச்சிலையார் மட்டும் அதனைக் கண்டு வழக்கிற்கேற்ப உரை வகுத்திருப்பது பாராட்டற்குரியதும் பொருத்தமானதுமாகும்.[3]

தமிழில் வினைமுற்றுக்கள் வினையெச்சமாகச் செயலாற்றுதல் உண்டு. தொல்காப்பியனார் ''வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய'' (தொ. சொ. 457) என்று குறிப்பிடுவதற்கு 'வினையெச்சங்கள் வேறுபட்ட பல இலக்கணத்தையுடைய' என்று உரையாசிரியர்கள் விளக்கம் கூறி, வினைமுற்று வினை-

---

2. தெய்வச்சிலையார், தொ. சொ. 201.
3. The Treatment of Morphology in Tolkappiyam' (pp, 152-154) என்னும் ஆய்வு நூலில் கொடுக்கப்பட்ட கருத்தினின்று இவண் குறிப்பிடும் செய்தி வேறுபட்டுள்ளது. இது ஆய்வு அடிப்படையில் அமைந்த அறிவுவளர்ச்சியின் விளைவேயாம்.

யெச்சமாகச் செயலாற்றுவதையும் எடுத்துக்காட்டுகின்றனர். தொல்காப்பியனார் வினையெச்ச வாய்பாடுகளை வினையியலில் தொகுத்துக் கூறிப் (தொ. சொ. 228) பின்னர் எச்சவியலில் வேறு அமைப்பில் நின்று வினையெச்சமாக வழங்குவனவற்றைக் கொள்ளவே இவ்வாறு கூறுகின்றார் எனலாம். நன்னூலார் இதனையே,

வினைமுற்றே வினையெச்ச மாகலும்
குறிப்புமுற் றீரெச்ச மாகலும் உளவே (நன். 351)

என வெளிப்படையாகத் தெளிவுபடக் கூறுவது இவண் நோக்கத்தக்கது. எனவே வினைமுற்று வினையெச்சமாகச் செயலாற்றுதல் இலக்கண நூலார்க்கு உடன்பாடேயாகும். இதனையே பிற்கால உரையாசிரியர் 'முற்றெச்சம்' என்றனர்.

எ-டு. ஒடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்கண்
இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோர்
(கலி. 65. 23, 24)

வினைமுற்றுக்கள் பெயர்களாகச் செயலாற்றுதலும் உண்டு. பெயராகச் செயலாற்றும் வினைமுற்றினைத் தொல்காப்பியனார் வினைப்பெயர், தொழிற்பெயர் (தொ. சொ. 139, 165, 168) என்னும் பெயர்களால் குறிப்பிடுவர். நன்னூலார் வினையாலணையும் பெயர் ( நன். 286) என்பார்.

எ-டு வேர்பிணி பன்மலர் வேயு மோரும் (பரி. 12. 16)

எனவே தொடக்க நிலையில் மாரீற்று வினைகள் வினைமுற்றுக்களாகவே வழங்கி இருத்தல் வேண்டும். அவை உடன்பாடு, எதிர்மறை ஆகிய இருநிலைகளிலும் அமைந்திருக்கலாம். அவை வினைகளையே தழுவும் சொற்களாக நின்று முற்றெச்சங்களாகவும் எழுவாய்களாக நின்று வினையாலணையும் பெயர்களாகவும்கூட ஓரளவு வழக்கில் தொன்றுதொட்டே இடம்பெற்றிருக்கலாம் எனத்தெரிகிறது. காலப்போக்கில் அவற்றின் முற்றெச்ச வழக்கே மிகுதியும் செல்வாக்குப் பெறவே, அவை அடிப்படையில் வினைமுற்றுக்கள் என்ற நிலையினை மறுக்க

உடன்படாத இலக்கண ஆசிரியர் அவற்றைக் காலக்கிளவி-யொடு முடியும் வினைமுற்றுக்கள் எனக்கருதலாயினர். முதன்-முதல் பல்லோர் படர்க்கைச் சொற்களுடன் இயைபு பெற்றே மாரீற்று முற்றெச்சங்கள் வழங்கி இருக்கலாம்; பின்னர்ப் பிற-பால் வினைகளுடனும் இயைபுபெருமல் வழங்கலாயின என-லாம். காலப்போக்கில் மாரீற்று வினைகளின் முற்றெச்ச வழக்கு-மிகுந்துவிடவே அவை வினைமுற்றுக்களாக நிலைபெருமற்-போயின. ஒரு சில நிலைபெற்றவை கூட எதிர்மறை வினை-முற்றுக்களாகவே அமைகின்றன.

மாரீற்று வினைச்சொல் பெயர் கொண்டு முடியுமா ?

தெய்வச்சிலையார் தவிர ஏனைய எல்லா உரையாசிரியர்-களும் மாரீற்று வினைமுற்று பிறமுற்றுச் சொற்போற் பெய-ரொடு முடியாது காலத்தை உணர்த்தும் சொல்லாகிய வினைச்-சொல்லோடு முடியும் என்று கூற, அவர் மட்டும் பெயரோடு முடிதலன்றி, வினையொடும் முடியும் என்று கூறுகின்ருர்.

சேனவரையர் 'பாடன்மார், காணன்மார் எனவும் மாரீற்-றுச் சொற்கள் பெயர்கொண்டு வந்தனவாலெனின் அவை பாடுவார், காண்பார்என்னும் ஆரீற்று முற்றுச் சொல்லின் எதிர்மறையாய் ஒரு மொழிப்புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றன. மாரீருயின் அவை பாடாதொழிவார், காணுதொழி-வார் என ஏவற்பொருண்மை உணர்த்து மாறில்லையென்க' என்று விளக்கம் தருகின்ருர்.

நச்சினர்க்கினியர் 'நிலவன்மாரே புலவர் (புறம். 375-18), பாடில் மன்னரைப் பாடன்மார் எமரே (புறம்.375-21), நோய்-மலி வருத்தம் காணன்மார் எமரே (நற். 65) என்பன நிலவுக, பாடுக, காண்க என்னும் வியங்கோட்கிளவிக்கு எதிர்மறை என்று உணர்க' என்கின்ருர்.

கல்லாடனர் 'பாடில் மன்னரைப் பாடன்மார் எமரே என்று பெயர் கொண்டு முடித்தனவால் எனின் அவை பாடுக, நிலவுக எனவரும் வியங்கோளிற்கு எதிர்மறை' என்கின்ருர்.

எனவே தொல்காப்பிய உரையாசிரியர்கள் பலரும் பெயர் கொண்டு முடியும் கேளன்மார், பாடன்மார் போன்ற மாரீற்று வினைகளைக் கேண்மார், பாடுமார் ஆகிய வினைகளின் எதிர்-மறைச்சொற்கள் என்றோ, அன்றேல் ஒழுங்கான படர்க்கைப் பலர்பால் வினைமுற்றுக்கள் என்றோ கொள்ளவில்லை என்பது தெளிவாகத் தெரிகின்றது. ஆனால் உண்மையில் அவை மாரீறு பெற்ற படர்க்கைப் பலர்பால் எதிர்மறை வினைமுற்றுக்களே-யாகும். அவை பெயரோடு முடிகின்றன. எனவே அவை மாரீற்று எதிர் மறை வினைமுற்றுக்கள் என்பதில் ஐயம் ஒன்று-மில்லை. அவை பயனிலைகளாகச் செயலாற்றுகின்றன. மார் விகுதிபெற்ற உடன்பாட்டு வினைமுற்று ஒன்று பெயர் எழுவாய் ஏற்றுப் பயனிலையாக வழங்குகின்றமையும் சங்க இலக்கியத்-தில் காணக்கிடக்கின்றது.

எ-டு. காதலர் செலினும் நோன்மாரல்லர் நோயே (நற். 208.6)

எனவே மாரீற்று வினைச்சொற்கள் பெயர் கொண்டு முடி-தல் உண்டு என்று கண்டோம். அதுவே அவற்றின் பழமை-யான நிலை எனலாம்.

'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றும் மாரீற்று வினையும்

'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று படர்க்கைப் பலர்பாலில் வராது என்றும் (தொ. சொ. 227), நிகழ்காலத்தில் தான் வழங்கும் என்றும் (தொ. சொ. 173, 227) தொல்-காப்பியனார் கூறுகின்றார். செய்யும் என்னும் வாய்பாட்டு வினை முற்றில் திணை, பால், எண் காட்டும் விகுதி இல்லை. தொடக்க நிலையில் 'செய்யும்', என்னும் வாய்பாட்டில் அமைந்து வழங்கிய வினைமுற்றுக்கள் சில காலப் போக்கில் திணை-பால், எண் காட்டும் விகுதிகளை ஏற்று வழங்கத் தலைப்பட்டிருக்கலாம். அவ்வாறு விகுதியை ஏற்று வழங்கும் வடிவங்களில் 'மார்' ஈறு பெற்ற வினைச்சொல்லும் ஒன்று எனக் கொள்ளுதல் பொருந்தும். இது படர்க்கைப் பலர்பால் விகு-தியை ஏற்கவே 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றின்

பலர்பாலில் வழங்காது என்னும் தடையையும் நீக்கி விட்டது எனலாம்.[4] இவ்வாறு 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினை-முற்றே திணை - பால், எண் விகுதி பெற்று வழங்குதல் பல வினைச்சொற்களிலும் காணப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| எ—டு. கொய்யுமோன் | (புறம். 225) | கொய்யும்-ஓ-ன் |
| அறியுமோன் | (புறம். 137) | அறியும்-ஓ-ன் |
| என்மார் | (பரி. 11.11) | என்ம்-ஆ-ர் |
| நோன்மார் | (நற். 208.6) | நோன்ம்-ஆ-ர் |
| என்னுமோர் | (குறள். 653) | என்னும்-ஓ-ர் |
| வேயுமோர் | (பரி. 12, 16) | வேயும்-ஓ-ர் |
| உண்மர் | (பதி. 24, 19) | உண்ம்-அ-ர் |
| என்மர் | (பரி. 12, 49) | என்ம்-அ-ர் |
| என்மனர் | (கலி. 119, 16) | என்ம்-அன்-ஆ-ர் |
| காணன்மார் | (நற். 64) | காண்-அல்-ம்-ஆ-ர் (காணன்ம்) |
| கறக்குந்து | (புறம், 352) | கறக்கும்-து |
| பூப்பறிக்குந்து | (புறம். 352) | பூப்பறிக்கும்-து |
| இசைக்குமன | (தொ. சொ. 1) | இசைக்கும்-அன்-அ |
| செய்ம்மன | (தொ. சொ. 222) | செய்ம்-அன்-அ |

எனவே 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றி-லின்று ஆண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் வினைச்சொற்கள் அவற்றிற்குரிய திணை-பால், எண் காட்டும் விகுதிகள் இணைந்து அமைந்துள்ளன என்று அறிதும். இது காலப்போக்கில் ஏற்பட்ட வளர்ச்சியேயாகும்.

என்மர், என்மார், என்மனர்

இம்மூன்று சொற்களின் அடிப்படையும், வளர்ச்சியும் மேற்கொடுக்கப்பட்டிருக்கும் சொற்களின் பட்டியல் வாயிலாகச் சிறந்த விளக்கம் பெறுகின்றன. தொல்காப்பியனார் அர், ஆர் என்பன படர்க்கைப் பலர்பால் விகுதிகள் என்று கூறுகின்றார்.

---

4. தொ. சொ. 227, நன். 348.

எனவே என்மர், என்மார் என்னும் சொற்களில் 'என்ம்' என்னும் 'செய்யும்' வாய்பாட்டு வடிவுடன் முறையே அர், ஆர் விகுதிகள் இணைந்து உள்ளன எனலாம். என்மனார் என்ற சொல்லையும்அவ்வாறே பகுத்துக்காணுங்கால்(என்ம்-அன்-ஆர்) ஆர் விகுதியும் அதற்கு முன்னர் அன் சாரியையும் அமைந்திருத்தலைக் காணலாம். இதற்கு மாறாக உரையாசிரியர்கள் இதன் அமைப்பு பற்றிப் பல்வேறுபட்ட விளக்கம் தந்து இடர்ப்படுகின்றனர்[5].

இளம்பூரணர், கல்லாடனார் ஆகியோர் "என்மனார்என்பது, என்ப என்னும் முற்றுச்சொல்லைக் குறைக்கும் வழிக் குறைத்தல்என்பதனால் பகரம் குறைத்து விரிக்கும் வழிவிரித்தல் என்பதனால் மன்னும்ஆரும்என்பன இரண்டிடைச்சொற்பெய்து விரித்தான்" எனக் கூறி உள்ளனர். சேனாவரையர் "என்மனார் என்பது செய்யுண்முடிவு எய்தி நின்றதோர் ஆரீற்று எதிர்கால முற்றுச் சொல்" என்றார். நச்சினார்க்கினியர் என்என்னும்பகுதியும் ஆர் என்னும் பால்காட்டும் விகுதியும் சேர்ந்து அமைந்த சொல் என்றும், நிகழ்காலம் காட்டுவது என்றும் கூறுவர். தெய்வச்சிலையார் என்ப என்பது என்மனார் எனத்திரிந்தது என்றும், எதிர்காலத்தை உணர்த்து வதற்குரியது இங்கு நிகழ் காலத்தை உணர்த்துகின்றது என்றும் கூறுவர்.

முன்னர்க்கொடுக்கப்பட்ட சொல் விளக்கம் இவ்வையப்பாடுகளையெல்லாம் அகற்றிச் சொல்லமைப்பில் தெளிவு உண்டாக்கும் என்பது உறுதி.

காலக்குறியீடு

மாரீற்றுச் சொற்களின் காலம் யாது என ஆய்தல் பயன்தருவதாகும். அவை யாவும் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை என முன்னர்க் கண்டோம். 'செய்யும்' என்னும் வாய்பாட்டு

---

5. டாக்டர் மு. வரதராசனார், மொழியியற் கட்டுரைகள், பக். 221—224.

வினைமுற்று "நிகழூஉ நின்ற பலர் வரை கிளவி" (தொ. சொ 173) "நிகழுங் காலத்துச் செய்யும் என்னுங் கிளவி" (தொ. சொ. 227) என்னும் தொடர்களில் நிகழுங் காலத்தையே-குறிக்கும் என்று தொல்காப்பியனார் குறிப்பிடுகின்றார். நன்னூ-லார் "செய்யுநிகழ் பெதிர்வும்" (நன். 145) எனக் குறிப்பிட்டு அவை நிகழ்வு எதிர்வு ஆகிய இருகாலங்களில் வழங்கும் என்-கின்றார்.

முன்னர்க் கொடுக்கப்பட்ட சொற்களைப் பகுத்துக் காணுங்கால் உம்/ம் என்னும் வடிவம் அவற்றில் அமைந்து, அது காலங்காட்டி நிற்றலைக் காணலாம். இக்குறியீடு தொல்காப்-பியனார் காலத்தில் நிகழ்காலத்தையே சுட்டிற்று என்பது தெளிவு. காலப்போக்கில் நிகழ்வு, எதிர்வு ஆகிய இரு காலங்-களையும், சங்க இலக்கியத்தில் பல இடங்களில் எதிர்காலத்தை மட்டும் குறித்தலாயிற்று.

இளம்பூரணர், சேனாவரையர், கல்லாடனார் ஆகிய தொல்-காப்பிய உரையாசிரியர்கள் மாரீற்று வினைச்சொற்கள் எதிர்-காலத்தில் வழங்கும் எனக் குறிப்பிடுவது மிகப் பொருத்த-மாகவே உள்ளது. உம்/ம் எதிர்காலக் குறியீடேயாகும்.

'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றிலும் ,அதன் அடிப்படையில் தோன்றிய பிற திணை-பால், எண் காட்டும் வினைச்சொற்களிலும் உம்/ம் எதிர்காலக் குறியீடாக அமைந்து அதனை ஏற்று நிற்கும் சொற்கள் எதிர்காலச் சொற்களாகக் காணப்பட்டாலும் வழக்கில் பெரும்பாலும் நிகழ்காலப் பொரு-ளையே தந்து நிற்றல் கருதியே தொல்காப்பியனார் அடிப்படை வடிவத்தை 'நிகழுங் காலத்துச் செய்யுமென் கிளவி' (தொ. சொ. 227) என்று குறிப்பிட்டார் போலும்.

எ-டு. என்மனார் = என்று கூறுவர்,
செய்ம்மன = செய்பவை.
பாயுந்து = பாய்வது.
அறியுமோன் = அறியுமவன்.

முடிவுரை

மாரீற்று வினைச் சொற்கள் பற்றி இலக்கண நூல்கள் தரும் செய்தி, அவற்றின் சங்ககால வழக்கு, காலப்போக்கில் அவை வழங்கிய முறை, அவற்றின் வடிவம், தோற்றம், அமைப்பு முறை, அவை வழங்கும் காலம் ஆகியவை இக்கட்டுரையின்-கண் விளக்கப்பட்டுள்ளன.

# 'செய்ம்மன' என்னும் வாய்பாட்டுச் சொல்

தொல்காப்பியனார் உயர்திணை, அஃறிணை ஆகிய இரு திணைக்கும் பொதுவான விரவுவினைகளை

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த வென்னும்
அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்
திரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய
(தொ. சொ. 222)

என்னும் நூற்பாவில் எண்வகைகளாக வேறுபடுத்திக் கூறி உள்ளார். இவற்றுள் ஒன்றாகக் கொடுக்கப்பட்டுள்ள 'செய்ம்மன' என்னும் வாய்பாட்டுச்சொல் பற்றி இங்குக் காண்போம்.

தொல்காப்பியனார் எழுத்ததிகாரத்தில் அகரவீற்றுப் புணர்ச்சியினைக் கூறுங்கால் 'செய்ம்மன' என்னும் தொழிலிறு சொல்லும் (தொ. எ. 210) வருமொழி முதலில் வல்லினம் வரின் இயல்பாகப் புணரும் என்கின்றார். அவரே சொல்லதிகாரத்தின் முதல் நூற்பாவில் 'இசைக்குமன' என்னும் 'செய்ம்மன' என்ற வாய்ப்பாட்டுச் சொல் ஒன்றனையும் தம் மொழியில் ஆண்டுள்ளார்.[1] இவ்வாய்பாட்டுச் சொல்லின் ஆட்சி சங்க இலக்கியத்திலும் பிற்கால இலக்கியங்களிலும் காணப்-

---

1. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே
(தொ. சொ. 1)

படவில்லை. நன்னூலாரும் இதனைக் குறிப்பிடவில்லை. எனவே இது முற்றிலும் வழக்கிறந்து விட்டது எனலாம்.

முன்னிலை வினைச்சொல் தவிர ஏனைய இருதிணைப் பொது வினைகள் எல்லாம் ஐம்பால் மூவிடங்களுக்கும் உரியன (தொ. சொ. 224, 225) என்று தொல்காப்பியனார் கூறுகின்றார். எனவே 'செய்ம்மன' என்னும் வாய்பாட்டுச் சொல்லும் தொல்காப்பியனார் காலத்தில் ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கி இருத்தல் வேண்டும்.

உரையாசிரியர் கருத்துக்கள்

இளம்பூரணர் இசைக்குமன என்ற சொல்லை இசைக்குமன் என்று பாடங்கொண்டு (தொ. சொ. 1) 'இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சம்; மன் என்பது இடைச்சொல்' என்கின்றார். அவர் செய்ம்மன இருதிணைப் பொதுவினையாக வழங்குதற்கு, யான் செய்ம்மன, நீ செய்ம்மன, அவன் செய்ம்மன, அவை செய்ம்மன போன்ற எடுத்துக்காட்டுக்களைத் தருகின்றார் (தொ. சொ. 222).

சேனாவரையர் 'இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச் சொல். மன் என்னும் இடைச்சொல் மன என ஈறு திரிகிறது. மன் என்று பாடம் ஓதுவாரும் உளர் (தொ. சொ. 1). செய்ம்மன மனவீற்று முற்றாய் எதிர்காலம் உணர்த்தும்' (தொ. சொ. 222) என்கின்றார்.

தெய்வச்சிலையார்

'இசைக்குமன என்பது செய்ம்மன என்னும் தொழிற்பெயர். அது செய்யுமன என விரிந்து நின்றது. அது சொல்லென்னும் பெயர்ப்பயனிலை கொண்டு முடிந்தது' (தொ.சொ.1) என்றும் 'செய்ம்மன என்பது, யான் செய்ம்மன, நீ செய்ம்மன அவன் செய்ம்மன என எல்லாப் பாலோடும் ஒட்டுக. இது இக்காலத்துச் செய்வது, செய்வன, செய்பவை, செய்யுமவை என வழங்கும் போலும்' (தொ. சொ. 222) என்றும் கூறுகின்றார்.

நச்சினார்க்கினியர்

'இசைக்கும் என்பது செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று. மன் என்பது, வினை பற்றிய அசைநிலை இடைச்சொல்லாய் நின்றது' (தொ. சொ. 1.) என்றும், 'மன ஈற்று எச்சமாய் எதிர்காலம் உணர்த்தும் செய்ம்மன என்ற சொல்லும் ......' (தொ. சொ. 222) என்றும் கூறுகின்றார்.

கல்லாடனார்

'இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச் சொல் அது பின் நின்ற சொல்லென்பதனோடு பயனிலை வகையான் வந்தது. மன என்பதூஉம் வினைபற்றிய அசைநிலை இடைச்சொல்லாதலின் அதனோடு இயைபு கூறப்பட்டது (தொ. சொ. 1). செய்ம்மன என்பது தெரிநிலை வினைமுற்றே' (தொ. சொ. 1) என்றும், 'செய்ம்மன என அகர வீற்றதே எனினும், யான் செய்ம்மன என்புழி யான் செய்வேன் என்றும், நீ செய்ம்மன என்புழி நீ செய்வை என்றும், அவன் செய்ம்மன என்புழி அவன் செய்வன் என்றும் முற்றுச்சொல் நீர்மைத்தாய்ப் பால் காட்டும் என்பது' (தொ. சொ. 222) என்றும் கூறுகின்றார்.

செய்ம்மன என்ற சொல்லின் அமைப்பு

தமிழ் மொழியில் தொடக்கநிலையில் இருந்தே இட, திணை-பால் - எண் குறியீடுகளை ஏற்காத சில வினைமுற்றுக்கள் வழங்கியுள்ளன. அவற்றுள் சில காலப்போக்கில் இடம், பால் - எண் குறியீடுகளை ஏற்று வழங்கத் தலைப்பட்டன.

| | | | | |
|---|---|---|---|---|
| எ டு. | செய்கு :- | செய்கு + என் | 7 | செய்கேன் |
| | செய்யும் :- | செய்யும் + ஆர் | 7 | செய்மார் |
| | | கொய்யும் + ஓன் | 7 | கொய்யுமோள் |
| | | உண்ம் + அர் | 7 | உண்மர் |

'செய்ம்மன' என்னும் சொல்லும் இவையே போன்று 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுடன் இடம், பால்-எண் குறியீடு இணைந்த அமைப்பேயாம்.

செய்ம் — அன் — அ (தொ. சொ. 222)
இசைக்கும்—அன்—அ (தொ. சொ. 1)

இச்சொல்லமைப்புக்களைக் கூர்ந்து நோக்கின் இவை அமைப்பில் அஃறிணைப் பன்மை வினைமுற்றுக்கள் எனவும், இவற்றில் 'அன்' சாரியை எனவும் 'அ' அஃறிணைப் பன்மை வினைமுற்று விகுதி எனவும் அறிந்து கொள்ளலாம்.

காலம்

'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று நிகழுங்காலத்தது என்றும் அது முக்காலத்தியலும் ஒத்தியல் பொருளையும் சுட்டப் பயன்படும் என்றும் (தொ. சொ. 227, 240) தொல்காப்பியனார் கூறியுள்ளார். காலப்போக்கில் சங்க இலக்கியத்திலும் பிற்கால இலக்கியத்திலும் அது பெரும்பாலும் எதிர்காலத்தை உணர்த்திற்று. எனவே அது இறப்பல் காலத்தை (non-past) உணர்த்திற்று என்பதில் தவறில்லை. எனவே அதன் அடிப்படையில் தோன்றிய 'செய்ம்மன' என்னும் வாய்பாட்டுச் சொல்லும் இறப்பல் காலம் குறித்ததாக வழங்கி இருத்தல் வேண்டும். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் இது எதிர்காலம் உணர்த்தும் என்று குறிப்பிடுவதும் இவண் கருதத்தக்கது.

விரவு வினையா ?

'செய்யும்' என்னும் வாய்ப்பாட்டுச் சொல் இருதிணை ஐம்பால் மூவிடங்களிலும் வழங்குதற்கு உரையாசிரியர்கள்,

யான் செய்ம்மன
யாம் செய்ம்மன
நீ செய்ம்மன
நீயிர் செய்ம்மன

அவன் செய்ம்மன
அவள் செய்ம்மன
அவர் செய்ம்மன
அது செய்ம்மன
அவை செய்ம்மன

போன்ற எடுத்துக்காட்டுக்களைத் தந்து அதனைப் பொதுவினையாகக் காட்டுகின்றனர். 'செய்ம்மன' என்னும் சொல் அமைப்பில் அஃறிணைப் பன்மை வினைமுற்று என்று கண்டோம். அஃறிணைப் பன்மை வினைமுற்று அஃறிணைப்பன்மைப் பெயருடன் மட்டுமே இயைபுற (concord) வழங்க முடியும்.[2] எனவே அவர் அதனை இருதிணைப் பொதுவினையாக்கிக் கூறுவதும், உரையாசிரியர்கள் அது ஐம்பால் மூவிடப் பெயர்களோடு வழங்குவதற்கு எடுத்துக்காட்டுக்கள் தருவதும் எவ்வாறு பொருந்தும்? அது வினைமுற்ருக அஃறிணைப் பன்மைப் பெயர் ஒழிந்த ஏனைய பெயர்களுடன் இயைபுற அமைதல் இயலாதே.

இளம்பூரணர் 'இசைக்குமன' என்ற சொல்லைப் பெயரெச்சம் என்கின்ருர். நச்சினர்க்கினியர் 'இசைக்கும்' என்பதைச் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று என்று கூறினும் 'செய்ம்மன' என்பதை மன ஈற்று எச்சம் என்கின்ருர். சேனவரையரும் கல்லாடனரும் 'செய்ம்மன' என்ற வாய்பாட்டுச் சொல்லை வினைமுற்று என்றே கருதுகின்றனர். ஆனல்தெய்வச்சிலையார் மட்டும் 'இசைக்குமன' வென்பது செய்ம்மனவென்னும் தொழிற்பெயர் என்றும் 'செய்ம்மன' வென்பது இக்காலத்துச் செய்வது, செய்வன, செய்பவை, செய்யுமவை என

2. வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்
பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே
(தொ. சொ. 11)

என்று தொல்காப்பியனர் கூறுவதும் இதனை வலியுறுத்துகின்றது.

வழங்கும் போலும் என்றும் கூறி அச்சொல்லின் உண்மை நிலையைத் தெளிவு படுத்தியுள்ளார். தொழிற்பெயர் என்பது தொல்காப்பியராலும் தெய்வச்சிலையாராலும் வினையாலணையும் பெயரையும் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட சொல்[3]. எனவே 'செய்ம்மன' என்பது வினையாலணையும் பெயராகவே இரு திணைப் பெயர்களுடன் தொடர்ந்து நின்று வழங்கி வந்ததனைக் கருதியே தொல்காப்பியனார் அதனை விரவுவினையுள் அடக்கி இருக்கலாம் எனக் கருத இடமுண்டு.

தொல்காப்பியச் சொல்லதிகார முதல் நூற்பாவில் அமைந்துள்ள 'இசைக்குமன' என்னும் சொல்லை ஏனைய எல்லா உரையாசிரியர்களும் 'சொல் இசைக்குமன' என்று கொண்டு, 'இசைக்கும்' என்ற சொல்லை வினைமுற்றாக்கிச் சொல் என்னும், வடிவில் கள்ளொடு சிவணாத அஃறிணைப் பன்மைப் பெயரின் பயனிலையாகக் கொள்ளத் தெய்வச்சிலையார் மட்டும் இசைக்குமன என்னும் தொழிற்பெயர் 'சொல்' என்னும் பெயர்ப்பயனிலை கொண்டு முடிந்தது என்கின்றார். 'இசைக்குமன' என்பது பெயர்ப்பயனிலை கொண்டு முடிந்ததாயின் அது வினையாலணையும் பெயராக அமைந்த எழுவாயாகி வழக்கில் அமைகின்றது என்பது தெளிவு.

சொல் இசைக்குமன
இசைக்குமன சொல்

'இசைக்குமன' என்னும் சொல் வினைமுற்றாக நின்று பயனிலையாக அமையினும் வினையாலணையும் பெயராக எழுவாயாக வழங்கினும் அது கள்ளொடு சிவணாத அஃறிணைப் பன்மைப் பெயராகிய 'சொல்' என்னும் சொல்லோடு இயைபுற அமைகின்றது. எனவே தொடரமைப்பில் இங்குச் சிக்கல் ஒன்றும் இல்லை.

---

3. தொ. சொல். 133, 139.

தொடர் அமைப்பு

யான் செய்ம்மன, நீ செய்ம்மன, அவன் செய்ம்மன போன்றவை இரு சொற்கள் அடங்கிய தொடர்களாகும். அவை முழு வாக்கியங்களாகச் சிறப்புற அமையவேண்டுமாயின், பிறிதோர் சொல் முடிக்குஞ் சொல்லாக அமைதல் வேண்டும். எடுத்துக்காட்டாகப் பரிபாடலில் காணும்

..............................யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
..............................(பரி, 5.78.81)

என்னும் அமைப்பினைக் கூறலாம். இவண் 'யாஅம் இரப்பவை' என்னும் தொடர் 'அருளும் அன்பும் அறனும் மூன்றும்' என்னும் முடிக்குஞ் சொற்களைப் பெற்றுள்ளது.

இவ்வாறுன அமைப்புகளில் 'செய்ம்மன' என்னும் வாய்பாட்டுச் சொல் வினையாலணையும் பெயர் ஒட்டாக - இணைந்து நின்று கூட்டு எழுவாயாகச் செயலாற்றுதல் இயலும். எனவே 'செய்ம்மன' என்னும் சொல் ஐம்பால் மூவிடப் பெயர்களுடன் இணைந்து இருதிணைப் பொதுவாகக் காணப்படினும் அது தன்னெடு இயைபுடைய பெயர் வினைப் பயனிலை கொண்டே முடிதல் இயலும். இப்படிப்பட்ட இணைவில் இது ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கியுள்ளமையும் இதனைத் தொல்காப்பியனுர் இருதிணைப் பொதுவினை எனக் கொள்ளக் காரணமாக அமையலாம்.

வினைமுற்றும் வினையாலணையும் பெயரும்

சில வினைமுற்றுக்கள் காலப்போக்கில் வினைமுற்று வழக்கினை இழந்து, வினையெச்சமாகவோ வினையாலணையும் பெயராகவோ வழங்குகின்றன. 'செய்யும்' என்னும் வாய்பாட்டு

4. தொ. சொ. 169.

வினைமுற்று அடிப்படையில் தோன்றிய மாரீற்று வினைச்சொற்களையும்[5] உந்தீற்று வினைச்சொற்களையும்[6] இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இவை பெரும்பாலும் வினையாலணையும் பெயர்களாகவே மொழியில் ஆட்சி பெற்றுள்ளன; அடிப்படையான வினைமுற்று வழக்கினை இழந்து விட்டன எனலாம்.

முடிவுரை

செய்ம்மன என்பது அமைப்பில் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுடன் 'அன்' சாரியையும் — 'அ' அஃறிணைப் பன்மை விகுதியும் இணைந்து அமைந்த அஃறிணைப் பன்மை வினைமுற்று என்பதும், அது இறப்பல் காலத்தினைக் குறித்து வழங்கியது என்பதும் ,வினைமுற்ருக அது அஃறிணைப் பன்மைப் பெயருடன் இயைந்து வழங்கி இருத்தல் வேண்டும் என்பதும், வினையாலணையும் பெயராக அது ஐம்பால் மூவிடங்களிலும், ஐம்பால் மூவிட எழுவாய்களுடன் கூட்டு எழுவாயாக நின்றும் வழங்கி இருத்தல் வேண்டும் என்பதும் விளக்கப்பட்டன. இவ்வாறு வினையாலணையும் பெயராக அது ஐம்பால் மூவிடப் பெயர்களுடன் இணைந்து வழங்கியமை கருதியே அதனைத் தொல்காப்பியனார் இருதிணைப் பொதுவினையாகக் கொண்டார் என்பது சாலும். ஒருவகையில் செய்ம்மன என்ற சொல் பயன்வகையில் பன்மைத் தொழிற் பெயராக அமைகின்றது என்று கூறினும் பொருத்தமாக அமையும்.

---

5. இசரயேல், மோ., மாரீற்று வினைச்சொற்கள், செந்தமிழ், தொகுதி, 66 (1970), பக். 45-53.

6. இசரயேல், மோ., உந்தீற்றுச் சொற்கள் (இக்கட்டுரை அண்மையில் வெளிவரவுள்ளது).

# குறிப்பு வினை

சொல்லின் வடிவ அமைப்பை அடிப்படையாகக்கொண்டு வினைக்கு இலக்கணங் கூறிய தொல்காப்பியனார்

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங்காலைக் காலமொடு தோன்றும் (தொ.சொ.198)

என்னும் நூற்பாவின்கண் வேற்றுமை ஏலாமை, காலமொடு தோன்றுதல் ஆகிய இரண்டும் வினையின் இயல்புகள் என்று வரையறுத்துக் கூறியுள்ளார்.

குறிப்பு வினை பகுப்பு[1]

தொல்காப்பியர் வினைச் சொல்லை வினை, குறிப்பு என இரண்டாகப் பகுக்கின்றார். எல்லா வினைகளையும் போன்றே குறிப்பு வினையும்[2] உயர்திணைக் குரியன, அஃறிணைக் குரியன, இருதிணைக்கும் உரியன-ஆக அமையும் என எடுத்துக்காட்டுக்களாலும் விளக்கம் தந்துள்ளார். அவர் எச்சவியலில் குறிப்பு வினை மூவிட வேறுபாடு உடையனவாகவும் வழங்கும் என்கின்றார் (தொ.சொ. 427).

---

1. குறிப்பு வினைபற்றிய செய்திகள் :- தொ. எ. 237, 372, தொ. சொ. 71, 200, 201, 210, 213-215, 217, 220, 221, 427, 432.
நன். 321, 328, 349, 350 முதலியன.

2. குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றி
..........................................................
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ வுருபின் தோன்ற லாறே (தொ.சொ.201)

தொல்காப்பியத்தின்கண் உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணைகளில் வழங்கும் குறிப்பு வினைகள் அமையுமாறு மிகத்-தெளிவாக விளக்கப்பட்டுள்ளது (தொ.சொ. 213-215; 220, 221).

உயர்திணைக்கண், குறிப்புவினை உடைமைப் பொருட்-கண்ணும் (எ-டு. குழையினன், கச்சினன்), ஏழாம் வேற்றுமை நிலப் பொருட்கண்ணும் (எ-டு. நிலத்தினன், புறத்தன்), ஒப்-பின் கண்ணும் (எ-டு. பொன்னன்னன், புலியன்னன்), பண்-பின் கண்ணும் (எ-டு. கரியன், பெரியன்) வழங்குவதோடு அன்-மை, இன்மை, உண்மை, வன்மை ஆகிய சொல்லடிகளைக் கொண்டும் (எ-டு. அலன், இலன், உளன், வல்லன்) தோன்றும்.

அஃறிணைக்கண், இன்று, இல, உடைய, உடைத்து, அன்று, அல்ல என்னும் சொற்களும், பண்புகொள்கிளவியும் (எ-டு. கரிது, கரிய), பண்பின் ஆகிய சினை முதற்கிளவியும் (எ-டு. குறுந்தாட்டு, குறுந்தாள்), ஒப்பொடு வரூஉங்கிளவியும் (எ-டு. அன்னது, அனைய) குறிப்பு வினைகளாக வழங்கும்.

விரவு வினைகளைக் கூறும் நூற்பாவின்கண் குறிப்பிடப்படும் 'இன்மை செப்பல்' என்னும் தொடர் இருதிணைப் பொது வினைகளாகிய இல்லை, இல் போன்ற குறிப்புவினைகளைக் குறித்து நிற்கின்றது என உரையாசிரியர்கள் கருதுகின்றார்கள். (தொ. சொ. 222)

காலக்குறிப்பா? வினைக்குறிப்பா?

வினை இலக்கணங்கூறுங்கால் "நினையுங்காலைக் காலமொடு தோன்றும்" என்பதால் வினைச் சொல்லுள் வெளிப்படக் காலம் விளக்காதனவுமுள. அவையும் ஆராயுங்காற் காலமுடைய வென்றற்கு 'நினையுங்காலை' என்றார் என்பது சேனாவரையர் கருத்து (தொ. சொ. 200). தொல்காப்பியனார் இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய முக்காலமும் குறிப்பு வினையோடும் பொருந்தும் நிலைமையையுடையன (தொ.சொ. 200) என்கின்றார். இவண்

வெளிப்படக் காலம் விளக்காதன குறிப்பு வினை என உரையாசிரியர்கள் விளக்கம் தருகின்றனர். தொல்காப்பியனார் குறிப்பும் காலம் காட்டும் என்பதை உறுதிப்படுத்தும் வாயிலாகக்

> குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
> காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்
> ........................ ..............(தொ. சொ.201)

என்னும் அடிகளில் எல்லா வினைச்சொல்லும் காலமொடு நிகழும் என்கின்றார்.

ஆனால் குறிப்பு வினைகளை ஆயுங்கால் அவை முக்கால வேறுபாடு உடையனவாக வழங்குதல் இல்லை.[3] அவற்றில் காலத்தைக் காட்டும் குறியீடு இல்லை என்பதும் தெளிவு. எனவேதான் உரையாசிரியர்களும் பிற்கால இலக்கண அறிஞர் பலரும் 'குறிப்பு' என்பது காலத்தையே குறிப்பது என்றும், காலத்தைக் குறிப்பாகப் புலப்படுத்துவதுதான் குறிப்பு வினை அல்லது வினைக் குறிப்பின் இலக்கணம் என்றும் கருதலாயினர்.[4]

---

3. தொ. சொ. 194. தெய்வச் சிலையார் 'உடையன் என்பது முன்பு உடையன், இப்போது உடையன், பின்பு உடையன் என்று மூன்று காலத்திற்கும் வேற்றுமைப்பட நில்லாமையின், காலம் குறித்துக் கொள்ளப்பட்டது' என்கின்றார்.

4. இதற்குச் சான்றாகப் பின்வரும் நூற்பாக்களின் செய்திகள் அமைகின்றன.

   1. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
      அம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளும் (தொ. சொ. 200)
   2. காலங் குறிப்போடு தோன்றும் (தொ.சொ. 213)
   3. குறிப்பே காலம் (தொ. சொ. 214)
   4. குறிப்பொடு வரூஉங் காலக்கிளவி (தொ. சொ. 215)
   5. குறிப்பொடு வரூஉங் காலக்கிளவி (தொ.சொ. 221)

அங்ஙனம் காலத்தின் அடிப்படையில் பெயர் பெற்றதாயின் தொல்காப்பியனார் 'காலக்குறிப்பு' என்று ஏன் பெயரிடவில்லை? பல்வேறு இடங்களில் 'குறிப்பு' என்று அவற்றைக் குறித்த அவர் ஒரு இடத்தில் 'வினைக்குறிப்பு' (தொ. சொ. 72) என்று தெளிவாகக் குறிக்கின்றனரே! நன்னூலாரும் பல இடங்களில் (நன்னூல், 269, 321, 347, 349, 350, 351) வினைக்குறிப்பு என்றே குறிப்பிட்டுள்ளார். ஆகவே தொல்காப்பியனார் கருத்துப்படி குறிப்பாகப் பொருள் தந்து நிற்பது காலம் அன்று; வினை (தொழில்) ஆகும் என்பர் பிற்கால ஆராய்ச்சியாளர் சிலர்.[5] உரையாசிரியர்கள் காலம், தொழில் ஆகியவற்றிற்குத் தரும் விளக்கமும் இதற்கு அரண் செய்யும் வகையில் அமைகின்றது. 'இறப்பாவது தொழிலது கழிவு, நிகழ்வாவது தொழில் தொடங்கப்பட்டு முற்றுப் பெறாமை, எதிர்வாவது தொழில் பிறவாமை; தொழிலாவது பொருளினது புடை பெயர்ச்சி' என்கின்ற அடிப்படையில் வினையின்கண் அமைந்த பகுதிதான் புடைபெயர்ச்சியுடையதாக அமைதலாலும் குறிப்பின்கண் அமையும் பகுதி அங்ஙனம் புடைபெயர்ச்சி பெறாமையாலும் அறிக. இவண், குறிப்புவினையடிகள் பிற வினையடிகளைப் போன்று முன்னிலை ஒருமை ஏவலாக வழங்காமையும் கருதத்தக்கது. மேலும் சேனாவரையர் "கரியன், செய்யன் என்புழித் தொழின்மை தெற்றென விளங்காது குறித்துக் கொள்ளப்படுதலின் குறிப்பென்றார்" என்று குறிப்பிடுவதும்

---

5. இத்தகைய கருத்திற்கும் தொல்காப்பியத்தில் சில அகச்சான்றுகள் உள்ளன.

| | | |
|---|---|---|
| 1. | வினைக்குறிப்பு | (தொ. சொ. 71) |
| 2. | வினையினும் குறிப்பினும் | (தொ. சொ. 437) |
| 3. | வினையும் குறிப்பும் | (தொ. சொ. 432) |
| 4. | குறிப்பினும் வினையினும் | (தொ. சொ. 201) |

எனவே தொல்காப்பியனார் குறிப்பு (தொ. சொ. 220) என்ற சொல்லைச் சில இடங்களில் காலத்திற்கு மாறுபட்டதாகவும், வேறு இடங்களில் வினைக்கு முரண்பட்டதாகவும் ஆண்டுள்ளார் என்பது கருதத்தக்கது.

'குறிப்பு' என்னும் சொல் தொழிற் குறிப்பையே புலப்படுத்துகின்றது எனபதைத் தெளிவுபடுத்துகின்றது.

இவ்வாருக ஒரு சாரார் தொல்காப்பியனுர் 'குறிப்பு என்பது காலக் குறிப்பினையே குறித்தது என்றும் மற்ருெரு சாரார் தொழிற் குறிப்பினையே குறித்தது என்றும் கூறி முரண்பட்டாலும் உண்மையை ஆயின்வினைக்குறிப்பின்கண் காலமும் தொழிலும் குறிப்பாக அமைந்து கிடக்கின்றன என்பது தெளிவுறும்.

இதுகாறும் கூறப்பட்ட செய்திகளின் துணைக்கொண்டு குறிப்பு வினையின் உண்மையான இயல்புகள், அவற்றின் வடிவம், பயன்வகை (function) ஆகியவற்றை ஆராய்வோம்.

மொழியியலார் கொள்கை

மொழியியல் அறிஞர் பலரும் குறிப்பு வினையை வினையின் ஒரு தனிவகை என்றே கருதுகின்றனர். டாக்டர் கால்டுவெல் "பழந்திராவிட மொழிகள் எந்தப் பெயரையும் பெயரடையையும் வினைவிகுதி வடிவங்களை இணைத்து வினையாக மாற்றமுடியும். இவ்வினை எண், இடம் ஏற்று வந்தாலும் நிகழ்காலத்திற்கு உரியதாக அமையும்; எனெனில் காலக்குறிப்பு அதில் இராது" என்கின்ருர்[6].

எல்.வி. இராமசாமி ஐயர் அவர்கள் "கால வேறுபாடு காட்டாத ஒரு வகையான வினைகள் பெயரடி, பெயரடை அடி, வினையல் அடி (Non-Verbal roots) ஆகியவற்ருேடு வினை விகுதிகளை இணைப்பதால் உண்டாகின்றன. இவை விகுதிகளுக்கு முன்னர் -அத்-, -இன்- ஆகிய இடையொட்டுக்களை ஏற்றலும் கூடும்" என்கின்ருர்[7].

யூலி பிளாக் என்ற அறிஞர் இவ்வகையான அமைப்பு எல்லா திராவிட மொழிகளிலும் காணப்படுகின்றது என்றும்

6. Caldwell, R., A Comparative Grammar of the Dravidian Languages, 1961, pp. 477, 478
7. Ramaswami Ayyar, L. V., "The Morphology of the Old Tamil Verbs," Anthropos, 33 (1968), p. 776.

அடிப்படைப் பெயர்களோடு வினை விகுதிகள் இணைவதால் இவை அமைகின்றன என்றும் குறிப்பிடுகின்றார்[8]. இவற்றை இடவேறுபாடு உணர்த்தும் பெயர்கள் (Pronominalised Nouns) என அழைக்கலாம்.

குறிப்பு வினை வடிவம்

| | | |
|---|---|---|
| 1. | கச்சினன் | கச்சு + இன் + அன் |
| | கழலினன் | கழல் + இன் + அன் |
| | துப்பினை | துப்பு + இன் + ஐ |
| | அன்பன் | அன்பு + அன் |
| | அகத்தன | அகம் + த் + அன் + அ |
| | களிற்றினர் | களிறு + இன் + அர் |
| | கண்ணேம் | கண் + ஏம் |
| | புறத்தன் | புறம் + த் + அன் |
| 2. | கரியன் | கரு (கரி) + ய் + அன் |
| | நல்லன் | நல் + அன் |
| | பெரியர் | பெரு (பெரி) + ய் + அர் |
| | கரிது | கரு (கரி) + து |
| 3. | உடையன் | உடை + ய் + அன் |
| | அல்லன் | அல் + அன் |
| | உளன் | உள் + அன் |

மேற்கொடுக்கப்பட்டிருக்கும் குறிப்பு வினையடிகளை ஆயுங்கால் முதல் வகையின பெயரடிகளாகவும், இரண்டாம் வகையின பெயரடை அடிகளாகவும், வேறுசில இவை இரண்டிலும், வினையடிகளிலும் அடங்காதனவாகவும் உள்ளன என்பதை அறிதல் இயலும்.

குறிப்பு வினைகளின் பாகுபாடு

தொல்காப்பியனார், பவணந்தி முனிவர், உரையாசிரியர் ஆகியோர் குறிப்பிடும் குறிப்பு வினைகளை மூன்று வகைகளாகப் பாகுபாடு செய்யலாம்.

---

8. Bloch, Jules, The Grammatical Structure of Dravidian Languages, 1954, p. 37.

1. பெயரடியாகத் தோன்றிய ஆக்கப்பெயர்கள்

எ-டு. கச்சு + இன் + அன்
கண் + எம் முதலியன.

2. பெயரடையடியாகத் தோன்றும் பெயர்கள்

எ-டு. கரியன், செய்யன் முதலியன.

3. பிற அடியுடன் அமையும் குறைவினைகள்

எ-டு. அல்லது, உளன், உள முதலியன.

குறை வினைகள்

வினைக் குறிப்பின்கண் அடங்கும் குறைவினைகள் அல்—, இல்—, உடை—, உள்—, அன்— ஆகிய அடிகளினின்று தோன்றுபவையாகும். இவை பெயரடிகளோ பெயரடையடி-களோ இல்லை. பெயரடை அடிகட்கும் வினையடிகளுக்கும் இடைப்பட்ட தன்மையுடையன எனலாம். இவைகளைக் குறை வினை அடிகள் என்று கூறுதல் சாலப்பொருந்தும். இவற்-றோடு வினைவிகுதிகளை இணைத்துக் குறைவினை முற்றுக்கள் ஆக்-கப்படுகின்றன. குறிப்பு வினையின்கண் இலக்கண நூலார் கூறும் இச்சொற்களே வினைகளாகும். ஏனையவை பெயர்களே-யாகும். இவை காலக் குறியீட்டை ஏற்பதில்லை. எதிர்மறைக் குறியீட்டையும் பெறுவதில்லை. இவண் இல்—, அல்-என்னும் அடிகள் இயல்பாகவே எதிர்மறை அடிகள் என்பது குறிப்-பிடத்தக்கது. இவ்வினையடிகள் பிற தொழில்வினையடிகளைப்-போன்று ஏவலாக வழங்குதல் இல்லை. இவற்றில் தன்வினை பிறவினை வேறுபாடுகூட அமைதல் இயலாது. இவ்வடிகளி-னின்று தொழிற் பெயர்கள் கூட ஆக்கப்பெறுதல் இல்லை. தொழில் வினையடிகளினின்று வியங்கோள் வினைமுற்றுக்கள் அமைதல் இயலும். ஆனால் குறை வினையடிகளினின்று வியங்-கோள் வினைமுற்றுக்கள் பெரும்பாலும் அமையா. எனவே இவை வினைகளாகச் செயலாற்றினும் குறைவினைகளே ஆகும்.

இக் குறைவினைகளின் அமைப்பினையும் அவை பல்வேறு பால்களில் வழங்கும் பான்மையினையும் கீழே காண்போம்.

| அடிகள் | ஆண் பால் | பெண் பால் | பலர் பால் | ஒன்றன் பால் | பலவின் பால் |
|---|---|---|---|---|---|
| அல்- | அல்லன் | அல்லள் | அல்லர் | அன்று | அல்ல |
| இல்- | இலன் | இலள் | இலர் | இன்று | இல |
| உள்- | உளன் | உளள் | உளர் | உண்டு | உள |
| உடை- | உடையன் | உடையள் | உடையர் | உடைத்து | உடைய |
| அன்- | அன்னன் | அன்னள் | அன்னர் | அன்னது | அன்ன |

குறிப்பும் குறைவினையும்

குறிப்பில் இலக்கண நூலார் கொள்ளும் இவையாவும் வினைகளே என்பதற்குப் பின்வரும் சான்றுகளைக் காட்டுதல் இயலும்.

1. தொல்காப்பியனார் வினையும் குறிப்பும் செயப்படு-பொருளை ஏற்று வழங்கும் (தொ.சொ. 71) என்று கூறி இருப்-பினும், குறிப்பின்கண் குறைவினை என்று பாகுபாடு செய்யப் பட்ட சில சொற்கள் மட்டுமே செயப்படுபொருளை ஏற்று வழங்குதலும் பிற ஏலாமையும் அறிதற்பாலது.

எ-டு. யாம் எந்தை இலம்.
யான் பொருள் உடையன்.
அவன் புலி அன்னன்.

2. இக்குறை வினைகள் இங்குக் குறிப்பிட்டிருக்கும் வடிவ அமைப்பிலும் வழக்கு நிலையிலும் பயனிலையாக மட்-டுமே வழங்குவனவாகும். பயனிலையாக வழங்குதல் வினையின் இயல்பாம்.

எ-டு. அவன் அல்லன்.
அது அன்று.
அவர் இலர்.

இவ்வினைகள் வடிவு மாற்றம் பெற்று அல்லது உருபு ஏற்று அல்லது தமக்கு முன் பிறசொற்களை ஏற்று மட்டுமே பெயர்களாகச் செயலாற்ற முடியும்.

எ-டு. இல்லார் என்றும் இகழப்படுபவரே.
பொருள் உடையன் பெருவாழ்வு வாழ்கின்றான்.

3. வினைகள் வினையெச்சத்தால் தழுவப்படுதல் இயல்பு. அதாவது வினைகள் வினையெச்சங்களின் முடிக்கும் சொல்லாகச் செயலாற்றுகின்றன. ஒழுங்கான பிற வினைச் சொற்களைப் போன்று குறைவினைகள் வினையெச்சங்களால் தழுவப்படுகின்றன.

எ-டு. அவன் பொருள் பெற்று இலன்.
அவள் பொருள் கொடுத்து உளள்.

4. குறைவினைகளுக்குப் பதிலாக அவ்விடத்தில் ஒழுங்கான வினைகளைத்தான் அமைக்க முடியும்; பெயர்களை அமைத்தல் இயலாது.

எ-டு. அவன் வந்து இலன்.

அவன் வந்து (         ) சென்றான்.

அவன் பொருள் உடையன்.

அவன் பொருள் (         ) தந்தான்.

அவன் நல்லவன் அல்லன்.

அவன் நல்லவன் (         ) ஆயினான்.

5. குறைவினை யடிகளினின்று குறைவினை எச்சங்கள் அமைதல் இயலும்.

| | | | |
|---|---|---|---|
| எ-டு. | அல்— | அன்றி | அல்லா |
| | இல்— | இன்றி | இல்லா |
| | உள்— | — | உள்ள |
| | உடை— | — | உடைய |

6. வினையெச்சம் ஏற்கும் முடிக்குஞ் சொற்களைக் கூறும் தொல்காப்பியனார்

வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே (தொ. சொ. 432)

என்னும் நூற்பாவின்கண் குறிப்பு வினை ஆக்கவினையொடும் முடிவு பெறும் என்று குறிப்பிடுகின்றார். ஆனால் குறிப்பின்கண் அவர் அமைத்துள்ள குறைவினைகள் ஆக்கவினைகளை ஏற்றுத்-தான் முடியவேண்டும் என்ற உறுதி வழக்கில் காணப்படுதல் இல்லை.

எ-டு. அவன் பொருள் உடையன்.
அவன் நல்லவன் அல்லன்.

எனவே தொல்காப்பியனார் இங்குக் குறிப்பிடும் வரையறை அவர் குறிப்பின்கண் கொள்ளும் குறை வினையல்லாத ஆக்கப்-பெயர்களுக்கே முழு அளவில் பொருந்துவதாகும்.

வினைக்குறிப்பும் பயன்வகையும்

டாக்டர் மு. வரதராசனார் குறிப்புவினைகளின் வினை இயல்பு-வினை அல்லாத இயல்புகள் அனைத்தும் ஆய்ந்த பின்னர் பயனிலைகளாகச் செயலாற்றும் பெயர்கள்தான் குறிப்பு வினை-கள் என்று முடிவு கூறி உள்ளார்[9]. பெயரடிகளினின்றும் பெயரடை அடிகளினின்றும் ஆக்கப்படும் குறிப்பு வினைகளைப் பொறுத்த வரையில் பேராசிரியர் அவர்களின் முடிவு முற்றிலும் ஏற்றுக்கொள்ளற்குரியதே. அவை பெயர்களாகவே செயலாற்-றுவதால் அவற்றைப் பெயர்வகைகளில் ஒன்றான ஆக்கப் பெயர்களாகக் கொள்ளலாம்.[10] ஆனால் இலக்கண நூலார்

---

9. Varadarajanar, M., " குறிப்பு வினை ", Tamil Culture, VIII (1959), p. 92.

10. Israel, M., The Treatment of Morphology in Tolkappiyam, 1973, pp. 37, 109.

வினைக்குறிப்பின்கண் கொள்ளும் குறைவினைகள் வினைகளாகவே செயலாற்றுகின்றன என்பது முன்னர் தெளிவுபடுத்தப்பட்டது. அவை வினைகளே ஆகும் என்பது உறுதி.

முடிவு

எனவே வினைக்குறிப்பு என்று இலக்கண நூலார் கொண்டிருக்கும் சொற்கள் காலம், தொழில் ஆகியவற்றைக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றன என்பதும், அவற்றுள் பெயரடி, பெயரடையடி ஆகியவற்றுடன் விகுதிகள் இணைந்து அமைவன பெயராகும் என்பதும், சில பெயரடை அடிக்கும் வினை அடிக்கும் இடைப்பட்ட இயல்பு வாய்ந்தனவும் ஏவல் வினையாக வழங்காதனவுமான குறை வினையடிகள் வினைவிகுதிகளை ஏற்றுக் குறைவினைகளாக அமைகின்றன என்பதும் குறைவினைகள் வினைகளின் இயல்பைப் பெற்றுச் செயலாற்றுவதால் வினைகளே ஆம் என்பதும் அறிகின்றனம்.

வினைக்குறிப்புக்கள் பல ஆக்கப்பெயர்கள், சில குறைவினைகள் ஆகியவற்றின் தொகுப்பேயாகும்.

# துணை வினைகள்

இவ்வுலகில் வழங்கும் எல்லா மொழிகளிலும் இன்றியமையாது அமைந்துள்ள ஒரு சொல்வகை (Word-class) வினைச்சொல் எனலாம். தனித்து வழங்காது பிற ஒழுங்கான வினைகளோடு சேர்ந்து வழங்கும் துணைவினைகளும் (auxiliary verbs) பல மொழிகளில் உள்ளன. அவை தம்மில்தாமே முழுப்பொருள் உடையன அல்ல. தனித்தியங்கும் இயல்பும், முழுப்பொருளும் கொண்ட மற்ற வினைகளுடன் சேர்ந்து அவை கூட்டு வினைகளாக (Compound verbs) அமைதலும் உண்டு. அவ்வாறு அமையுங்கால் துணைவினைகள் தாம் இணைந்துள்ள முழு வினைகளின் கால வேறுபாடு, நிலை வேறுபாடு முதலியவற்றை உணர்த்தி நிற்கின்றன. தமிழ் மொழியிலும், ஏனைய திராவிட மொழிகளிலும் இத்தகைய துணைவினைகள் பல வழங்குவதைக் காண்கின்றோம்.

## இலக்கண நூலார் கொள்கை

தொல்காப்பியனார், நன்னூலார் போன்ற இலக்கண ஆசிரியர்கள் துணைவினைகளைப் பற்றிய இலக்கண விளக்கம் தரவில்லை. எனினும் தொல்காப்பியனார் காலத்தில், அல்லது சங்க காலத்தில், அல்லது அதனினும் பிற்பட்ட காலத்தில் பேச்சு வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் துணைவினைகள் வழங்கவில்லை என்று கூறுதல் இயலாது. இலக்கண ஆசிரியர்கள் இடைச் சொற்களில் ஒரு வகையான அசைச் சொற்களாகக் கருதும் வடிவங்களில் சில துணைவினைகளேயாகும். அவர்கள் துணைவினைகள் என்னும் குறியீட்டால் அவற்றைக் குறித்து விளக்கம் தந்தார் அல்லர். தொல்காப்பியனார் குறிப்பிடும்

சின் (இசின்)[1], இக, இகும் (தொ. சொ. 274, 275) முதலியவையும் நன்னூலார் குறிப்பிடும் சின் (இசின்), இகும், இருந்து, இட்டு (நன். 441) முதலியவையும் துணைவினைகளேயாம். இவை தனித்து இயங்கா வினைகளாதலின் பெயரொடும் வினையொடும் நடைபெற்றியலும் இடைச் சொல் வகையில் இலக்கண நூலார் சேர்த்துள்ளனர். மேற்காணும் துணைவினைகளின் வழக்குகளுக்கு கண்டிசினோர், காண்டிக, காண்டிகும், எழுந்திருந்தான், பிளந்திட்டான் போன்ற எடுத்துக்காட்டுக்களை உரையாசிரியர்கள் தருகின்றனர். இவற்றுள் இருந்து, இட்டு என்பன இக்காலத் தமிழிலும் துணைவினைகளாக வழங்குகின்றமை கவனிக்கும் பான்மையது.

முழுவினையும் துணைவினையும்

தமிழ் மொழியில் பல முழுவினை வடிவங்களே சில இடங்களில் துணைவினைகளாக வழங்குகின்றன. ஆனால் துணைவினையாக வழங்குங்கால் அவை தம் பொருள், செயலாற்றும் வகை ஆகியவற்றில் வேறுபடுகின்றன.

எ—டு.

| | முழுவினை | துணைவினை |
|---|---|---|
| 1. | அவன் அங்கு இருந்தான். | அவன் வந்திருந்தான். |
| 2. | அவன் சென்னை வந்தான். | அவன் வாழ்ந்து வந்தான். |
| 3. | அவன் சுவடியை வைத்தான். | அவன் உண்ண வைத்தான், |

கொடுக்கப்பட்டிருக்கும் சொற்றொடர்களில் இருந்தான், வந்தான், வைத்தான் என்னும் சொற்கள் முதல் வரிசையில் முழு வினைகளாகவும் இரண்டாம் வரிசையில் துணை வினைகளாக வும் வழங்குகின்றன. முதல் வரிசை வினைகளில் இரு, வா, வை என்பன வினையடிச் சொற்கள் (Verbal stems) ஆக உள்ளன; இரண்டாம் வரிசையில் உள்ள வினைகளில் வந்திரு, வாழ்ந்து-

1. "சின்" ஓர் அசைநிலையா? அன்று?—மோ. இசரயேல். பார்க்க: 'தென்மொழி', சுவடி 2: ஓலை 10, 41-45(1964).

வா, உண்ணவை என்பவை அடிச்சொற்களாக உள்ளன. இவற்றைக் கூட்டு வினையடிகள் (Compound verbal stems) எனலாம். இக்கூட்டு வினையடிகளில் உள்ள இரு, வா, வை என்னும் உறுப்புக்கள் தொழிலைக் குறிக்காமல் முறையே கால வேறுபாட்டையும், வழக்கத்தையும், பிறவினையாக்கும் செயலையும் உணர்த்தி நிற்கின்றன. எனவே துணைவினைகள் வினையைக் குறிக்காமல் பெரும்பாலும் வினையின் இயல்பை மாற்றம் செய்யத் துணைபுரிகின்றன என்று கூறுதல் பொருந்தும். அவை தம் சொற்பொருளை உணர்த்துதலைவிட இலக்கண வேறுபாடு உணர்த்துகின்றன எனலாம்.

துணைவினையும் கூட்டுவினையும்

துணைவினைகள் முழுவினைகளோடு சேர்ந்து கூட்டு வினைகளாகச் செயலாற்றுகின்றன. இக்கூட்டுவினை அமைப்புக்கள் தமிழ் மொழியில் பண்டைக்கால மொழியைவிட இக்கால மொழியில் மிகுதி எனலாம். சங்க இலக்கியங்களில் மிகக்குறைந்த அளவிலேயே துணைவினைகளால் அமைக்கப்பட்ட கூட்டு வினைகளைக் காணமுடியும். நாளுக்கு நாள் இத்தகைய வழக்குகள் தமிழ் மொழியில் மிகுதியாவதற்குக் காரணம் வடமொழி, ஆங்கிலமொழி ஆகியவற்றின் தொடர்பும் ஒன்றும் என்பதில் தவறில்லை. எடுத்துக்காட்டாக, ஆங்கில மொழியின் வினையில், பலவகையான காலவேறுபாடுகள் குறிக்கப்படுகின்றன. தமிழ் மொழியின் இலக்கண நூலார் கால வேறுபாடுகளை மூன்றெனக் கணக்கிட்டுள்ளனர். ஆனால் இக்காலத் தமிழில் 'இரு' என்னும் துணைவினையின் துணையால் பல வகையான கால வேறுபாடுகளை உணர்த்த முடிகிறது.

செய்திருந்தான்
செய்திருக்கிறான்
செய்திருப்பான்
செய்யா நின்றான்
செய்யா நிற்கிறான்
செய்வான்

மேலும், கண்டு விடு, மறைந்து போ, வந்தருள், எழுந்திரு, கொல்லப்படு, செய்யவை, வாழ்ந்துவா, செய்து பார் முதலியன யாவும் துணைவினைகள் இணைக்கப்பட்டு ஆக்கப்பட்ட கூட்டு வினையடிகளேயாம். இக்கூட்டு வினையடிகள் மொழியில் பலவகை வினைவேறுபாட்டினையும் (moods), கருத்தா வேறுபாட்டினையும் (voice), செயல் வேறுபாட்டினையும் (aspect) வெளியிடத் துணைசெய்கின்றன.

துணைவினை அமையும் வகை

தமிழ் மொழியில் துணைவினைகள் முழுவினைகளின் செய்து,[1] செய (செய்ய) என்னும் வாய்பாட்டு வினையெச்சங்களோடு தான் பெரும்பாலும் இணைக்கப்படுகின்றன. சிறுபான்மை தொழிற்பெயர்களோடும் துணை வினைகள் இணைந்து வருதல் உண்டு. காலம், இடம், பால்எண் இவற்றைத் துணை வினையடிகளே ஏற்று இயங்குகின்றன.

எ-டு. வாழ்ந்து வந்தான்
செய்ய வைத்தான்

| முழுவினை | துணைவினைகளுடன் இணைக்கப்பட்டுள்ளன |
|---|---|
| வாழ்-வாழ்ந்து | வாழ்ந்து வந்தான் = வாழ்ந்து வா-ந்த் + ஆ + ன் |
| செய்-செய்ய | செய்ய வைத்தான் = செய்ய வை-த் + ஆ + ன் |

துணைவினைகளின் பயன்

துணைவினைகள் மொழியில் தோன்றும் புதிய இலக்கண வேறுபாடுகளை உணர்த்தப் பயன்பட்டு வினைச் சொற்களின் எண்ணிக்கையைப் பெருக்குகின்றமையான் மொழி மாற்றத்திற்குக் காரணமாக அமைந்துள்ளன. காலப்போக்கில் வளரும் கருத்துக்களைத் தடையின்றி உணர்த்த இவை பெரிதும் பயன்-

1. தொ. சொ. 228. இவண் ஆடி, கூறி, பாடி போன்ற இகர விற்று வினையெச்சங்களுக்கு வாய்பாடு கூறுது இருப்பினும் அவை 'செய்து' என்னும் வாய்பாட்டில் அடங்குமாறு கொள்க.

படுகின்றன. வினையின் நுட்பமான கால வேறுபாடுகள், நிலை வேறுபாடுகள், செயலாற்றும் முறை வேறுபாடுகள் யாவும் புலப்படுத்த இவை பயன்படுகின்றன. தமிழ் மொழியைப் பல ஆண்டு கற்று, அதன் இயல்பை நன்கு உணர்ந்த டாக்டர் ஜி. யு. போப் என்னும் ஆங்கிலநாட்டு அறிஞர் தமிழ் மொழியின் வளர்ச்சியில் துணைவினையின் பெருக்கம் துணை புரிதலைப் பாராட்டிக் கூறி உள்ளார்.[1]

சில துணைவினைகள்

தமிழில் வழங்கும் சில சிறப்பு வாய்ந்த துணைவினைகளையும் அவை குறிக்கும் பொருள் வேறுபாட்டையும் கீழே தருதும்.

1. கால வேறுபாடு குறிப்பன

அ. 'இரு' இத்துணைவினை குறித்து நிற்கும் கால வேறுபாடுகள் முன்னர் தரப்பட்டுள்ளன. மேலும் இத்துணைவினையால் வந்திருக்கலாம், வந்திருக்கவேண்டும் போன்ற வேறுபாடுகளையும் அமைத்துக் கொள்ளலாம்.

ஆ. 'கொண்டிரு' இது வினை நிகழ்ச்சியின் தொடர்ச்சியைக் குறிக்கப் பயன்படுகிறது.

எ-டு. படித்துக் கொண்டிருந்தான்

இ. 'ஆ, போ, உள், விடு, போடு, -இடு' என்பன பெரும்பாலும் நிகழ்ச்சி முற்றுப்பெற்றதைக் குறிக்கப் பயன்படுகின்றன. சிலவேளைகளில் அவை நிகழ்ச்சியின் உறுதியைப் (certainty) புலப்படுத்தி நிற்றலும் உண்டு.

எ-டு. 1. வந்தாயிற்று, கேட்டாயிற்று.
2. மறைந்து போயிற்று, செத்துப் போனன்.
3. வந்துள்ளது.
4. கண்டுவிட்டாள்.
5. அடித்துப் போட்டான்.
9. செய்திட்டான்.

---

1. Pope, G. U. A Hand book of the Ordinary Dialect of the Tamil Language (1911), p. 68.

"போ, போடு, விடு' என்பன அடிக்கடி உறுதிப் பொருளில் வழங்குதலும் உண்டு. இவை எல்லாம் சிறிது வேறுபட்ட பொருட்களில் வழங்குதலையும் மொழி வழக்கில் காணலாம்.

ஈ. 'வா' இது வழக்கமான நிகழ்ச்சியைக் (habitual tense) குறிக்கப் பயன்படுகின்றது.

எ—டு. வாழ்ந்து வந்தான்.

2. செயப்பாட்டுவினைப் பொருள் தருவன :

அ. 'படு' இது தொல்காப்பியனார் காலத்திலேயே நூல் வழக்கில் பயின்றுள்ள செயப்பாட்டு வினைக் குறியீடாகும். (Marker).

எ—டு. எழுத்து எனப்படுப (தொ. எ. 1.), செயப்பட்டது.

ஆ. 'பெறு'

எ—டு. செய்யப் பெற்றது.

இவை முழு வினைகளின் 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சங்களோடுதான் இணைக்கப்படும்.

'இரு' என்னும் துணைவினை இறந்தகால வினையெச்சத்துடன் இணைந்து நின்று செயப்பாட்டு வினைப்பொருள் உணர்த்தல் உண்டு.

எ—டு. எழுதி இருக்கிறது, செய்து இருக்கிறது.

3. பிறவினை குறிப்பன

அ. 'வை' எ—டு. உண்ண வைத்தான்.

ஆ. 'செய்' எ—டு. ஆடச் செய்தான்.

இ. 'பண்' எ—டு. ஓடப் பண்ணினான்.

4. எதிர்மறை உணர்த்துவது

'மாட்டு' எ—டு. செய்யமாட்டான்.

5. அனுமதி உணர்த்துவது

'ஆம்' எ—டு. வரலாம், செய்யலாம்.

இங்கு 'ஆம்' தொழிற்பெயருடன் இணைக்கப்பட்டுள்ளது.

6. பொருள் அழுத்தம் (emphasis) தருவன :

'இரு, இடு, விடு, போ' முதலியன ஏதேனும் செயலின் அழுத்தத்தை உணர்த்த ஆளப்படுதல் உண்டு. (பெரும்பாலும் ஏவலில்).

எ—டு. வைத்திரு, எழுந்திரு, கொடுத்திடு,
கொடுத்துவிடு, போய்விடு, செத்துப்போ,
இறந்துபோ, மறந்துபோ.

7. பிற பொருள் உணர்த்துவன

அ. 'கொள்' தானே வினையை ஆற்றிக் கொள்ளுதலைக் (reflexive) குறிக்கப் பயன்படுகிறது.

எ-டு. எடுத்துக் கொண்டான், வைத்துக் கொண்டாள்

ஆ. 'அருள்' பெரியோரிடம் பணிவுடன் அல்லது பெரியோர் செயலை மதிப்போடு கூற ஆளப்படுகிறது.

எ—டு. வந்தருள்க.

இ, 'பார்' முயற்சி செய்தலை வெளிப்படுத்துகின்றது.

எ-டு. செய்து பார்த்தான்.

மேலும் ஆம், கூடும், கூடாது, முடியும், முடியாது, வேண்டும், வேண்டா, தகும், தகாது என்பன போன்ற பலவும் துணை வினைகளாக ஆளப்படுதல் உண்டு. இவை காலம், எண், இடம், பால் முதலியவற்றில் பலவேனும் சிலவேனும் குறைவுள்ளனவாக உள்ளன. எனவே இவற்றை குறை வினைகள் (Defective verbs) என்னும் வகையின்பாற் கொள்ளலாம். இவற்றின் இயல்பு, பயன் வகை ஆகியவை பற்றி ஆய்வாளர் கருத்திற்கொள்ளவேண்டிய செய்திகள் பல உளவாதலின்

இவற்றை இவண் விரிக்காது சில எடுத்துக்காட்டுக்களை மட்டும் தருதும்.

எ-டு. நீ வரலாம், நீ வரல் ஆகாது.

அவள் வரக்கூடும், அவள் வருதல் கூடும்.

நீ அதை வாங்கக் கூடாது.

இங்கு நிற்பது கூடாது.

அவன் வேலை செய்ய முடியும்.

அவனால் இதைச் செய்ய முடியாது.

அவன் அங்கே போக வேண்டும்.

நீ இதைச் செய்ய வேண்டா.

நல்லோரிடத்தில் இருக்கத் தகும்.

இது செய்யத் தகாது.

இறுதியாகத் துணைவினைகள் முழு வினைகளின் எச்சங்களோடு இணைந்து பொருள் வேறுபாடுகளைத் தந்து நிற்கின்றன என்பதும், இக்காலத் தமிழில் அவற்றின் ஆட்சி மிகுதி என்பதும், நாளுக்கு நாள் வளர்ச்சி அடையும் கருத்துக்களைப் புலப்படுத்த அவை இன்றியமையாதன என்பதும் அறியுந்தன்மையன.

# தமிழில் கால வேறுபாடு

பெயரும் வினையும்

தொல்காப்பியனுர் பெயருக்கும் வினைக்கும் இலக்கணம் கூறுங்கால் கால வேறுபாட்டினை ஒரு அடிப்படை இலக்கண அமைப்பாகக் கொண்டு, காலம் ஏற்காதது பெயர் என்றும், காலம் ஏற்பது வினையெனவும் பாகுபாடு செய்கின்ருர். அவர்

'பெயர்நிலைக் கிளவி காலந் தோன்ரு
தொழில்நிலை யொட்டும் ஒன்றலங் கடையே''
(தொ. சொ. 70)

''வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங்காலைக் காலமொடு தோன்றும்''
(தொ. சொ. 198)

என்னும் நூற்பாக்களில் இக்கருத்தினைப் புலப்படுத்துகின்ருர்.

காலவேறுபாடு

தொல்காப்பியனுர் 'காலந்தாமே மூன்றென மொழிப' (தொ.சொ. 199) என்று குறிப்பிட்டுத் தமிழில் காலவேறுபாடு மூவகைத்து என்று தெளிவுபடுத்துகின்ருர். தொடர்ந்து 'இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ரு' (தொ. சொ. 200) என்று கூறிக் காலம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூவகையின என்பதைச் சுட்டிக் கூறுகின்ருர். நன்னூலாரும் 'இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலம் மூன்றே' (நன். 382) என்னும் நூற்பாவில் அவ்வாறே காலவேறுபாட்டினைக் குறிப்பிடுகின்ருர்.

'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று

காலம் மூன்று என்று கூறினாலும் தொல்காப்பியனார் மொழியில் தெளிவான வேறுபாட்டுடன் அமைகின்றவை இறப்பு, எதிர்வு ஆகிய இரு காலங்களுக்குரிய வினைகளே. தொல்காப்பியனார் நிகழ்காலத்தில் வழங்குகின்றனவாகக் குறிக்கும் சொற்கள் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைகளே. அவற்றை 'நிகழுங்காலத்துச் செய்யும் என்னுங்கிளவி'(தொ.சொ. 227) என்று கூறி அவை பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகிய மூன்று இடங்களிலும் வழங்கா என்றும் வரையறுக்கின்றார். எனவே, நிகழ்காலத்தனவாகிய 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் படர்க்கை ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய இடங்களில் மட்டுமே வழங்கின என்பது தெளிவு.

எ—டு. அவன் உண்ணும்.
அவள் உண்ணும்.
அது வரும்.
அவை வரும்.

தொல்காப்பியனார் நிகழ்காலத்தின என்று கருதுவது எல்லாம் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்களையே; ஆதலின் அவர் காலத்தில் படர்க்கை பலர்பால், தன்மை, முன்னிலை ஆகிய இடங்களில் எவ்வகையான நிகழ்கால வினைகள் வழங்கின என்பது தெளிவாக அறிதற்கியலவில்லை. கிறு, கின்று, ஆநின்று ஆகிய நிகழ்கால இடைநிலைகளைப் பெற்று வழங்கும் வினைகள் பிற்காலத்தனவே யாகும்.

தொல்காப்பியனார் காலத்தில் முக்காலத்திலும் ஒத்தியல் பொருளையும் (நன். 383) 'நிகழுங் காலத்துச் செய்யும் என் கிளவி' யாலேயே செப்பினர் என்பது,

"முந்நிலைக் காலமும் தோன்று மியற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்"
(தொ. சொல். 240)

என்னும் நூற்பாவால் தெளிவாகின்றது.

எ—டு. மலை நிற்கும்.
திங்கள் இயங்கும்.

எனவே தொல்காப்பியனார் காலத்தில் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் நிகழ்காலத்திலும் இயல்புப் பொதுமைக்காலத்திலும் வழங்கின என்பது தெளிவு.

'செய்யும்' என்னும் வாய்பாட்டின் வடிவம் அமைந்த தொல்காப்பியனார் பயன்படுத்தும் என்மனார் (தொல். எழு. 6,33) என்னும் வினையும், அவர் குறிப்பிடும் கொள்ளுமார், எள்ளுமார் (தொ. சொ. 207), செய்ம்மன (தொ. சொ. 227) போன்ற வினைகளும், சங்க இலக்கியங்களில் வழங்கும் கொய்யுமோன் (புறம். 225) உண்மர் (பதிற். 24), காணுமோர் (பதிற். 83) போன்ற சொற்களும் இவண் ஒப்பு நோக்கத்தக்கன. இவற்றுள் சில (என்மனார், செய்ம்மன) வழக்கத்தைக்குறிக்கும் பொதுவான காலத்தைக் காட்டுவனவாகவும் பிற நிகழ்வு, எதிர்வு ஆகிய இருகாலப் பொதுமையுடையனவாகவும் வழங்கின என்பது தெளிவு.[1]

எனவே தொல்காப்பியனார் காலத்தில் ஐம்பால் மூவிடங்களில் வழங்கும் தெளிவான நிகழ்காலத்திற்குரிய வினைவடிவங்கள் வளர்ச்சி பெறவில்லை என்பது சாலப் பொருந்தும். ஆனால் ஐம்பால் மூவிடங்களிலும் இறப்பு எதிர்வு ஆகிய இரு காலங்களிலும் வினைமுற்றுக்கள் தெளிவுற வேறுபாட்டுடன் வழங்கின என்பதைப் பின்வரும் சங்க இலக்கியச் சான்றுகளால் காட்டுதும்.

---

1. மோ. இசரயேல், 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று, தமிழ்ப்பொழில், துணர் 41 (1965), பக். 204—216.

| | இறப்பு | எதிர்வு | நிகழ்வு[2] |
|---|---|---|---|
| தன்மை ஒருமை | இருந்தேன் (புறம். 399) | இரங்குவேன் (புறம். 209) | — |
| தன்மைப் பன்மை | ஆயினேம் (புறம். 141) | உண்குவம் (புறம். 136) | — |
| முன்னிலை ஒருமை | அறிந்தனை (புறம். 35) | ஆகுவை (புறம். 70) | — |
| முன்னிலைப் பன்மை | இருந்தனிர் (புறம். 141) | ஆகுவிர் (புறம். 280) | — |
| ஆண்பால் | அருளினன் (புறம். 395) | ஆகுவன் (புறம். 396) | செய்யும் |
| பெண்பால் | ஆயினள் (புறம். 348) | ஆகுவள் (புறம். 254) | செய்யும் |
| பலர்பால் | அமைந்தனர் (புறம். 65) | ஆகுவர் (புறம். 236) | — |
| ஒன்றன்பால் | அமைந்தன்று (புறம். 395) | ஆவது (புறம். 63) | செய்யும் |
| பலவின்பால் | கழிந்தன (புறம். 97) | ஆகுப (புறம். 7) | செய்யும் |

பெயரெச்சம்

மேலும் தொல்காப்பியனார் செய்த, செய்யும் என்னும் இருவகையான பெயரெச்ச வாய்பாடுகளையே தந்துள்ளார் (தொ. சொ. 222). 'செய்த' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் இறந்த காலத்திலும் 'செய்யும்' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் நிகழ்வு, எதிர்வு என்னும் இரு காலங்களிலும் வழங்கின எனலாம்.

---

2. தொல்காப்பியனார் காலத்தில் தன்மையில் கு, து, டு, று, கும், டும், தும், றும் விகுதி பெற்ற வினைகளும் (தொ. சொ. 202, 203), முன்னிலையில் இ, இர் விகுதிபெற்ற வினைகளும் (தொ. சொ. 223, 224) நிகழ்காலத்தில் வழங்கி இருக்கலாம்.

தொல்காப்பியனார் கூறும் வினைமுற்றுக்களும் பெயரெச்சங்களும் அந்நூல் இயற்றப்பட்ட காலத்தில் மொழியில் இறந்தகாலம் இறப்பல்லாக்காலம் (Non-past) ஆகிய இருவகைக் காலவேறுபாடுகளே வெளிப்படையாக அமைந்து கிடந்தன என்பதனைத் தெளிவுபடுத்துகின்றன. சங்க இலக்கியங்களில் வழங்குகின்ற வினைமுற்றுக்களும் இதனை உறுதிப்படுத்துகின்றன எனலாம்.

பெரும்பாலான பெயரெச்சங்களும் இவ்விருவகைக் காலவேறுபாட்டிலேயே அமைவனவாக உள்ளன, ஆனால் எட்டுத்தொகையுள் பரிபாடல், பிற்காலத்தில் சிலப்பதிகாரம் ஆகிய நூற்களுள் சில பெயர் எச்சங்கள் மூவகைக் காலவேறுபாட்டிற்கு வித்திடுவனவாக அமைகின்றன. இந் நூற்கள் சமயக் கருத்துக்களை மிகுதியாகக் கொண்டுள்ளமையாலும், அவற்றில் வடமொழிச் சொற்கள் கலப்பு மிகுதியாகக் காணப்படுதலாலும் இவை பிற்காலத்தனவாக இருத்தல் வேண்டுமென்று அறிஞர் பலர் கருதுகின்றனர். பரிபாடலில் சேர்கின்ற (பரி. 22), சிலப்பதிகாரத்தில் உருள்கின்ற (29.110), ஊர்கின்ற (7.35), ஓசனிக்கின்ற (14.25) ஆகிய பெயர் எச்சங்கள் நிகழ்காலத்திற்கே உரியனவாய் அமைந்து கிடக்கின்றன. எனவே பெயர் எச்சங்களில் நிகழ்காலத்திற்கெனத் தனிப்பட்ட சொல் வடிவங்கள் கடைச்சங்க காலத்தின் பிற்பகுதியில் தான் தோன்றலாயின என்று அறிதும்.

நிகழ்காலத்தின் வளர்ச்சி

பின்னர்க் காலப் போக்கில் பெயர் எச்சங்கள் செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் வாய்பாடுகளில் மூவகைக் கால வேறுபாடுகளுடன் மிகுதியாக வழங்கத் தொடங்கி விட்டன. தேவாரத் திருவாசகக் காலத்தில் 'செய்கின்ற' என்னும் வாய்பாட்டு நிகழ்காலப் பெயர்எச்சங்கள் முழு வளர்ச்சி பெற்றுவிட்டன எனலாம்.

எ-டு. வளர்கின்ற, மிளிர்கின்ற, ஒளிர்கின்ற, தெளிகின்ற
(திரு. நீத்தல் விண்ணப்பம், 3)

இக்காலத்தில் வினைமுற்றுக்களிலும் தனிவகையான நிகழ்-கால வடிவங்கள் ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கலாயின.

எ-டு. மயங்குகின்றேன் (திரு. 62)
ஆழ்ந்திடுகின்றேன் (திரு. 81)

எவ்வாறேனும் கி.பி. 12-ஆம் நூற்றுண்டிற்கு முன்னர் வினைகளில் நிகழ்கால வடிவங்கள் முழுவளர்ச்சி அடைந்து மொழியில் பெருஞ்செல்வாக்கு அடைந்து விட்டன. எனவே பவணந்தி முனிவர் தமது நன்னூலில் வினைகளில் அமைகின்ற முக்கால இடைநிலைகளைப் பாகுபாடு செய்துள்ளார். தொல்-காப்பியனார் கால இடைநிலைகளைப் பாகுபாடு செய்து தரவில்லை யென்றாலும் அவர் காலத்தில் நன்னூலார் காலமொழியில் வழங்கின நிகழ்கால வினைகளைப் போன்ற சொற்கள் வழங்க-வில்லை என்பது முன்னர்க் கூறப்பட்டது. நன்னூலார் த், ட், ற், இன் ஆகிய இறந்த கால இடை நிலைகளையும், கிறு, கின்று, ஆநின்று ஆகிய நிகழ்கால இடைநிலைகளையும், ப், வ் என்னும் எதிர்கால இடைநிலைகளையும் கூறுகின்றார். (நன். 142-144)

தொல்காப்பியனாரால் ' நிகழுங்காலத்துச் செய்யும் என்னும் 'கிளவி' நிகழ்காலத்ததாகக் கொள்ளப்பட்டது. ஆனால் அவர் காலத்திலும் சங்க காலத்திலும் அது பல அமைப்புக்களில் எதிர்காலத்தில் வழங்கத் தொடங்கி நன்னூலார் காலத்தில் 'செய்யு நிகழ்பெதிர்வும்' (நன். 144) என்று குறிப்பிடும் அள-விற்கு நிகழ்வு எதிர்வு ஆகிய இருகாலங்களிலும் வழங்கியது என்பது தெளிவு.

இக்காலத் தமிழில் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினை-முற்றுக்கள் எதிர்காலத்தில் மட்டும் வழங்குவதும் இவண் கரு-தத்தக்கது. எனவே நிகழ்காலத்திற்கெனத் தனிப்பட்ட வடி-வங்கள் வளர்ச்சி பெறவே 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்-றுக்கள் எதிர்காலத்தில் மட்டுமே வழங்கத் தலைப்பட்டன என்ப-தில் தவறில்லை.

காலவேறுபாடும் துணைவினைகளும்

பிற்காலத்தில் தமிழ்மொழியில் பல காலவேறுபாடுகள் அமையத் தொடங்கின. இதற்குப் பிறமொழித் தொடர்பும் வளர்ந்து வரும் கருத்துக்களை மொழியில் வெளியிட எடுத்துக் கொண்ட முயற்சியுமே காரணமாகும். தொல்காப்பியனார் காலத்தில் இறப்பு-இறப்பன்மை ஆகிய இருவகை வேறுபாடும் பின்னர் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூவகை வேறுபாடும் பிற்காலத்தில் பல துணைவினைகளின் துணையால் பலவகைக் காலவேறுபாடும் மொழியில் அமைந்து கிடத்தலைக் காணலாம்[3]

இக்காலத் தமிழில் பின்வரும் வகைகளில் எல்லாம் காலவேறுபாடு அமைந்துள்ளது.

1. மூவகை — இடைநிலை

| | | |
|---|---|---|
| இறப்பு | வந்தான் | த், ற், ட், இன் |
| நிகழ்வு | வருகிறான் | கிறு, கின்று, ஆநின்று |
| எதிர்வு | வருவான் | வ், ப் |

2. நிகழ்ச்சித் தொடர்ச்சியில் மூவகை — துணைவினை

| | | |
|---|---|---|
| இறப்பு | வந்துகொண்டிருந்தான் | ‘கொண்டு இரு’ |
| நிகழ்வு | வந்துகொண்டிருக்கிறான் | ,, |
| எதிர்வு | வந்துகொண்டிருப்பான் | ,, |

3. நிகழ்ச்சி முடிவுற்றதைக் குறிப்பதில் மூவகை — துணைவினை

| | | |
|---|---|---|
| இறப்பு | வந்திருந்தான் | ‘இரு’ |
| நிகழ்வு | வந்திருக்கிறான் | ,, |
| எதிர்வு | வந்திருப்பான் | ,, |

---

3. மோ. இசரயேல், துணைவினைகள், தென்மொழி, சுவடி 2 ஓலை 12 (1965), பக். 64, 65.

4. வழக்கத்தைக் குறிக்கும் மூவகை — துணைவினை

| | |
|---|---|
| வாழ்ந்து வந்தான் | 'வா' |
| வாழ்ந்து வருகிறான் | ,, |
| வாழ்ந்து வருவான் | ,, |

5. நிகழ்ச்சியின் உறுநிலை அல்லது நிகழ்ச்சி முற்றுப் பெற்றதைக் குறிக்கும் வகைகள் — துணைவினை

| | |
|---|---|
| வந்தாயிற்று | 'ஆ' |
| மறைந்து போயிற்று | 'போ' |
| வந்துள்ளது | 'உள்' |
| கண்டுவிட்டான் | 'விடு' |
| அடித்துப் போட்டான் | 'போடு' |

இவை வேறுபட்ட பொருட்களில் வழங்குதலையும், பல இடங்களில் முக்கால வேறுபாட்டில் வழங்குதலையும் மொழி வழக்கில் காணலாம். மேற்கொடுக்கப்பட்டிருக்கும் துணைவினைகள் வேறு செயலைக் குறிக்காமல் வினையின் கால வேறுபாட்டைக் குறிக்கத் துணைபுரிகின்றன. இவ்வாறு துணைவினைகள் இணைந்து அமையும் கூட்டு வினையடிகள் சங்க இலக்கியங்களில் மிக அருகியே காணப்படுகின்றன. வடமொழி, ஆங்கிலம் ஆகிய பிறமொழித் தொடர்பாலும் காலப்போக்கில் வளரும் கருத்துக்களைத் தடையின்றி வெளியிடும் முயற்சியாலும் வினையின் நுட்பமான காலவேறுபாடுகளை மொழியில் அமைக்கத் துணைவினைகள் பயன்படுத்தப்படுகின்றன. வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பல வகையான காலவேறுபாடு அமைந்துள்ளமையும் இவண் நோக்கத்தக்கது.

# நிகழ் காலத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

மொழி மாற்றம்

உலகின் எல்லா மொழிகளும் காலப்போக்கில் மாறும் இயல்புடையன. இப்பொது உண்மைக்குத் தமிழ்மொழி வேறுபட்டதன்று. மொழி மாற்றத்தை மொழியின் சொல் வழக்கிலும், சொற்பொருளிலும், ஒலியனிலும், இலக்கணத் திலும் காணலாம். தமிழ்மொழி வரலாற்றில் காலப்போக்கில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை ஆயின், இவ்வுண்மை விளங்கும்.

தமிழ் மொழியில் வினைச்சொற்களே காலவேறுபாட்டைப் புலப்படுத்துவனவாக உள்ளன. தொல்காப்பியனார்,

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்

(தொ.சொ.198)

என்று குறிப்பிடுவது இவ்வுண்மைக்குச் சான்றுயுள்ளது. இக்கட்டுரையில் நிகழ்கால வேறுபாடு தமிழில் தொடக்க நிலையில் அமைந்திருந்த நிலை, காலப்போக்கில் அது தெளிவு பெற்றமை, வளர்ச்சியடைந்தமை, பிறமொழித் தொடர்பால் ஏற்பட்ட கருத்து வளர்ச்சிக்கு ஏற்ப நுண்மையான வேறுபாடுகளைப் புலப்படுத்தும் வகையில் பலவேறுபாட்டுடன் மொழியில் அது அமைகின்ற நிலை ஆகியவை வினைச்சொற்களின் வழக்கு அடிப்படையில் ஆராயப்படுகின்றன.

தொல்காப்பியர் காலம்

தொல்காப்பியனார் 'காலந்தாமே மூன்றென மொழிப' (தொ. சொ. 199) என்று தொகுத்துக் கூறித் தொடர்ந்து இறப்பு, நிகழ்வு, எதிர்வு என அதன் வேறுபாடுகள் என்று

தெளிவுபடுத்துகின்ருர் (தொ. சொ. 200). அவர் காலம் மூன்று என்று சுட்டிக்கூறினும் அவரது மொழியிலும் இலக்கணத்திலும் தெளிவான வேறுபாட்டுடன் அமைபவை இறப்பு, எதிர்வு ஆகிய இரண்டு காலங்களுக்குரிய வினைச்சொற்களே ஆகும். ஆனல் தொல்காப்பியனுர் 'நிகழுங் காலத்துச் செய்யும் என்னும் கிளவி' (தொ.சொ. 227) என்று முற்றுக்கள் குறிப்பிட்டுள்ள செய்தி,'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினை நிகழ்காலத்தில் வழங்கியதைத் தெளிவுபடுத்துகின்றது.

அவர்

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னுங் கிளவியொடு கொள்ளா (தொ. சொ. 227)

என்று கூறிச் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் படர்க்கை இடத்தில் மட்டும் ஆண்பால், பெண்பால், ஒன்றன் பால், பலவின்பால் ஆகிய பால்களில் வழங்கின என்பதைத் தெளிவுபடுத்துகின்ருர்[1].

எ-டு. அவன் செல்லும்.
அவள் செல்லும்.
அது செல்லும்.
அவை செல்லும்.

தொல்காப்பியனுர் நிகழ்காலத்திற்குரியனவாகக் கொள்வன எல்லாம் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்களே. எனவே அவர் காலத்தில் தன்மையிலும், முன்னிலையிலும், படர்க்கைப் பலர்பாலிலும், திணை, பால், இடவிகுதி

1. Israel, M., The Finite Verbs of 'Ceyyum' Pattern in Tamil, Indian Linguistics, 1964, pp. 179-181.

பெற்ற நிகழ் கால வினை முற்றுக்கள் இடம் பெறவில்லை என்பது தெளிவு.[2]

தொல்காப்பியனார் காலத்தில் 'முக்காலத்திலும் ஒத்தியல் பொருளையும்' (நன். 383) நிகழுங்காலத்துச் 'செய்யும்' என்னும் கிளவியாலேயே செப்பினர் என்பதனை,

முந்நிலைக் காலமும் தோன்று மியற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்
(தொ. சொ. 240)

என்னும் நூற்பாவால் குறிக்கின்றார்.

எ-டு. தீ சுடும்.
ஞாயிறு இயங்கும்.
யாறு ஒழுகும்.

எனவே தொல்காப்பியனார் காலத்தில் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினை முற்றுக்கள் நிகழ்காலத்தில் மட்டுமன்றி, இயல்புப் பொதுமைக் காலத்திலும் வழங்கின என்பது தெளிவு (தொ. சொ. 227, 240).

மேலும் தொல்காப்பியனார் 'செய்த, 'செய்யும்' என்னும் இரண்டு பெயரெச்ச வாய்பாடுகளையே தந்துள்ளார். 'செய்த' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் இறந்த காலத்திலும் 'செய்யும்' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் இறவாக் (நிகழ்வு, எதிர்வு) காலத்திலும் வழங்கின எனலாம். இச்செய்தியும் தொல்காப்பியனார் காலத்தில் தெளிவான நிகழ்காலம் வளர்ச்சியடையவில்லை என்பதை உறுதிப்படுத்துகின்றது.

---

2. இவ்வாராய்ச்சியில் கு, து, டு, று, கும், தும், டும், றும் என்னும் விகுதிகள் பெற்ற தன்மை வினைகள் உட்படுத்தப்படவில்லை. செல்லுதி, படர்தி போன்ற முன்னிலை வினைகளும் கருதப்படவில்லை.

'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றிற்குச் சங்க இலக்கியத்தில் கிடைக்கப்பெறும், பெரும்பாலான எடுத்துக்-காட்டுக்களும் குறிப்பாகக் கொள்ள இயலாத பொதுமைக் காலத்திற்கே உரியனவாகக் காணப்படுகின்றன.

எ-டு. அரசுஞ் செல்லும் (புறம். 183)
தாயும் மனந்திரியும் (புறம். 183)
அவன் தருமே (புறம். 171)
அவன் ஈயும் (புறம். 109)
மன்னுயிர் எல்லாம் நின்னஞ்சும்மே (புறம்.20)

'செய்யும்' என்னும் வாய்பாட்டின் அடிப்படையில் அமைந்-துள்ள தொல்காப்பியனார் பயன்படுத்தும் என்மனார் (தொ. எ. 6, 33) என்னும் வினையும், அவர் குறிப்பிடும் கொண்மார், என்னுமார் (தொ. சொ. 207), செய்ம்மன (தொ. சொ. 222), பாயுந்து, பெயர்க்குந்து (தொ. சொ. 292) போன்ற வினைக-ளும் இவண் ஒப்பிட்டு நோக்கத்தக்கன.[3]

என்-ம்-அன்-ஆர்
கொண்-ம்-ஆர்
செய்-ம்-அன்-அ
பாய்-உம்-து.

இவற்றுள் சில வழக்கத்தைக் குறிக்கும் பொதுமைக் காலத்திலும் (aorist), பிற நிகழ்வு, எதிர்வு ஆகிய இரு காலப் பொதுமையுடையனவாகவும் வழங்கின என்பது தெளிவு. எனவே வழக்கில் -உம்/ம் விகுதி தொல்காப்பியனார் காலத்தி-லும் சங்க காலத்திலும் தெளிவான நிகழ்காலத்தை உணர்த்த-வில்லை என்பது உறுதி.

சங்க காலம்

ஐம்பால் மூவிடங்களிலும் இறப்பு, எதிர்வு ஆகிய இரு காலங்களில் மட்டுமே வினைச்சொற்கள் தெளிவுற வேறுபாட்-

---

3. இசரயேல், மோ., எதிர்க்காலக் குறியீடு "உம் / ம்", செந்தமிழ் 1964, பக். 52-57.

டுடன் வழங்கின என்பதைப் பின்வரும் சங்க இலக்கியச் சான்றுகளினால் காட்டுதும்.

| | இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|---|
| தன்மை ஒருமை | இருந்தேன் (புறம். 399) | இரங்குவேன் (புறம். 209) | — |
| தன்மைப் பன்மை | ஆயினேம் (புறம். 141) | உண்குவம் (புறம். 136) | — |
| முன்னிலை ஒருமை | அறிந்தனை (புறம். 35) | ஆகுவை (புறம். 70) | — |
| முன்னிலைப் பன்மை | இருந்தனிர் (புறம். 141) | ஆகுவீர் (புறம். 280) | — |
| ஆண்பால் | அருளினன் (புறம். 395) | ஆகுவன் (புறம். 396) | செல்லும் (புறம். 183) |
| பெண்பால் | ஆயினள் (புறம். 384) | ஆகுவள் (புறம். 254) | திரியும் (புறம். 183) |
| பலர்பால் | அமைந்-தனர் (புறம். 395) | ஆகுவர் (புறம். 236) | — |
| ஒன்றன் பால் | அமைந்-தன்று (புறம். 395) | ஆவது (புறம். 63) | — செய்யும் |
| பலவின்பால் | கழிந்தன (புறம் 97) | ஆகுப (புறம் 7) | செய்யும் (கலி. 13) |

ஒல்லாரி, கூவி, கோண்டா ஆகிய மொழிகளிலும் இருவகைக் காலவேறுபாடுதான் அமைந்துள்ளது (இறப்பு. இறப்பன்மை). எனவே இவ்வகையான கால வோறுபாடு முந்தைத் திராவிட மொழியில் காணப்பட்ட இயல்போ எனக்கருத இடமுண்டு.

சங்க இலக்கியத்தில் காணப்பட்ட இறந்தகால அஃறிணை ஒருமை வினைமுற்றுக்கள் சில தவறாகப் பிற்காலத்தோரால் தொடக்க நிலையில் நிகழ்காலத்தனவாகக் கருதப்பட்டிருக்கலாம். அவைகளை முழுச்சொல் வடிவத்தில் காணுங்கால் பிற்காலத்தில் வளர்ச்சி பெற்ற 'கின்று' என்னும் நிகழ்கால இடைநிலை அமைந்திருப்பது போல் தோன்றுகின்றது. ஆனால் பகுத்துப் பொருள் தெரியின் அவற்றில் 'இன்' என்னும் இறந்தகால இடைநிலையும் 'று' (< து) என்னும் அஃறிணை ஒன்றன்பால் வினைவிகுதியும் அமைந்துள்ளமை போதரும்.

எ-டு. பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று (புறம். 1, 5)
இனிநினைந் திரக்கமா கின்று (புறம். 243, 1)
எய்யா தாகின் றெஞ்சிறு செந்நாவே (புறம். 148.7)
ஆகின்று (புறம். 1, 148, அகம். 116)
ஆகு + இன் + று
நோக்கின்று (புறம். 141) நோக்கு + இன் + று
செய்கின்று (புறம். 7) செய்கு + இன் + று
தொடங்கின்று (புறம். 20) தொடங்கு + இன் + று

இத்தகைய சொற்கள் சிலவற்றை உரையாசிரியர்கள் நிகழ்காலத்தனவாகக் கொண்டு உரை கூறுகின்றமையும் இவண் அறிதற்பான்மையது.

நன்று ஆகின்று (கலி. 41) நன்மை உண்டாகாநின்றது.

அலர் ஆகின்றது (ஐங். 132) அலர் உண்டாகாநின்றது. உண்மையை ஆயின், இச்சொற்கள் யாவும் இறந்த காலத்தனவேயாகும் என்பது தெளிவாகும்.

'ஆநின்று' என்ற இடைநிலை அமைகின்ற சில சொல் வழக்குகள் பழைய இலக்கியத்தில் காணப்படுகின்றன. சுரநனி வாரா நின்றனள் (ஐங்குறுநூறு, 397) இறை இறைவா நின்ற வளை (திருக்குறள். 1157) என்ற தொடர்களைப் பிற்காலத் தமிழில் உறுப்புக்களைப் பகுத்துக்காண்பதுபோல் பகுத்-

'ஆநின்று' என்ற நிகழ்கால இடைநிலை காணப்படும். இவற்றிற்கு உரையாசிரியர்களும் நிகழ்காலத்தில் தான் பொருள் கூறுகின்றனர். ஆனால் இந்த இரண்டு தொடர்களும் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் வினையைத் தழுவிநிற்பனவாகும். எனவே 'வாரா நின்றனள்'என்பது 'வந்து நின்றனள்' எனவும் 'இறவா நின்ற' என்பது 'இறந்து நின்ற' எனவும் பொருள்பட்டு இறந்தகால நிகழ்ச்சித் தொடர்ச்சியைப் புலப்படுத்துவனவாக உள்ளன.

நற்றிணையில் 'ஆகின்றது ஐய 'நின் நட்பு' என்ற தொடரிலும் அகநானூற்றில் 'அலராகின்றது பலர்வாய்ப் பட்டே' (அகம். 296, 368) என்னும் தொடரிலும் 'ஆகின்றது' என்ற சொற் றொடரில் 'கின்று' என்னும் நிகழ்கால இடைநிலை அமைவதுபோல் தோன்றுகின்றது. ஆனால் ஆகின்றது என்பது ஆகின்று+அது எனப்பிரித்துப் பொருள்கொள்ளவே பொருந்துவதாக உள்ளது. 'அது' ஒன்றன்பால் சுட்டுப் பெயராகவும் 'ஆகின்று' என்பது ஒன்றன்பால் இறந்தகால வினைமுற்றாகவும் உள்ளது. 'அது' எழுவாயாகவும் 'ஆகின்று' பயனிலையாகவும் அமைகின்றன. அகநானூற்றில் ஒரு இடத்தில் வருகின்ற தொடர் இவ்வாறு கொள்வதற்கு இடந்தரவில்லை.

... ... ... ... அதுவே
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
... ... ... ... ... ...

'அலராகின்றது பலர்வாய்ப் பட்டே (அகம். 96) இப்பாடலில் 'அதுவே' என்னும் சொல் வாக்கியத்தில் எழுவாயாகி நிற்பது. 'அலர் ஆகின்றது' என்னும் தொடர் அலர் + ஆ + கின்று + அ + து எனப் பிரித்தற்கு ஏற்றதாய் உள்ளது. எனவே, இவண் நிகழ்கால வினைமுற்றுதான் அமைந்துள்ளதோவென ஐயுற இடமுளது. இங்கு பொருள் அழுத்தத்தின் பொருட்டு எழுவாயே இருமுறை ஆளப்பட்டுள்ளது எனினும் பொருந்தும்.

சங்ககால எட்டுத் தொகை நூலாகிய பரிபாடலிலும் சங்க மருவிய கால இலக்கியங்களில் சிலப்பதிகாரத்திலும் அருகி வழங்குகின்ற சில பெயர் எச்சங்களே தெளிவான மூவகைக் கால வேறுபாட்டிற்கு வித்திடுவனவாக அமைகின்றன. சில ஆராய்ச்சி அறிஞர் இந்நூற்களை மிகப் பிற்காலத்தனவாகக் கருதுவர். [4]

| | |
|---|---|
| சேர்கின்ற | (பரி 22. 5, 35) |
| ஊர்கின்ற | (சிலம்பு 7. 35) |
| ஓசனிக்கின்ற | (சிலம்பு 14. 25, 125) |
| உருள்கின்ற | (சிலம்பு 29. 1, 10) |

இப்பெயரெச்சங்கள் தெளிவான நிகழ்காலத்திற்கே உரியனவாய் அமைந்து கிடக்கின்றன. எனவே நிகழ்காலத்திற்கெனத் தனிப்பட்ட சொல் வடிவங்கள் முதன்முதல் பெயர் எச்சங்களிலேயே கடைச்சங்க காலத்தின் பிற்பகுதியில்தான் தோன்றலாயின என்று அறிதும்.

பல்லவர் காலம்

சங்க காலத்தில் பெயரெச்ச வாயிலாகத்தோன்றிய நிகழ்கால வினை வடிவங்கள் பல்லவர் காலத்தில் மொழியில் மிகுதியும் வழங்கத் தலைப்பட்டன. எனவே காலப் போக்கில் பெயர் எச்சங்கள் செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் வாய்பாடுகளில் மூவகைக் கால வேறுபாட்டுடன் வழங்கலாயின. தேவார திருவாசகக் காலத்தில் 'செய்கின்ற' என்னும் வாய்பாட்டு நிகழ்காலப் பெயர்எச்சங்கள் முழுவளர்ச்சியும், பெருவழக்கும் எய்தின.

எ-டு. வளர்கின்ற, மிளிர்கின்ற, ஒளிர்கின்ற, தெளிகின்ற
(திரு. நீத்தல் விண்ணப்பம், 3)

மேலும் வினைமுற்றுக்களிலும் நிகழ்காலத்திற்குத் தனிப்பட்ட வடிவங்கள் அமைந்தன. அவை 'செய்யும்' என்னும் வினைமுற்றுக்கள் போலன்றி, தெளிவான நிகழ்காலத்தைக்

---

4. வையாபுரிப் பிள்ளை, எஸ்., இலக்கிய தீபம், 1955, ப. 84

காட்டுவதுடன் திணை, பால், எண், இடம் உணர்த்துவனவாக அமைந்தன.

எ-டு. மயங்குகின்றேன் (திருவாசகம், 62)
ஆழ்ந்திருக்கின்றேன் ( ,, 81)
அரற்றுகின்றேன் (திருவாசகம், குழைத்து பத்து, 10)
அஞ்சுகின்றேன் (திவ்ய. மாற்றமுளபத்து, 1)

நன்னூலார் காலம்

எவ்வாறேனும் கி.பி. 12-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் வினைகளில் நிகழ்கால வடிவங்கள் முழுவளர்ச்சி பெற்றதுமன்றி மொழியில் பெருவழக்காகி விட்டன. நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவர்

ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை இடைநிலை
(நன். 143)

என்று கூறுதற்கிணங்க ஆநின்று, கின்று, கிறு ஆகிய நிகழ்கால இடைநிலைகள் ஐம்பால் மூவிடத்திற்குரிய வினைகளிலும் அமைந்து விட்டன.

எ-டு. வராநின்றான்
வருகின்றான்
வருகிறான்

மேலும் நன்னூலார் பெயரெச்ச வாய்பாடுகளைச் 'செய்த, செய்கின்ற, செய்யும் என்பாட்டில்' (நன். 340) என்று குறிப்பிட்டு நிகழ்காலத்திற்குத் தனிப்பட்ட 'செய்கின்ற' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் மொழியில் இடம் பெற்றுள்ளமையை புலப்படுத்துகின்றார்.

தொல்காப்பியனார் காலத்தில் நிகழ்காலத்தனவாகக் கொள்ளப்பட்ட 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் நன்னூலார் காலத்தில் "செய்யு நிகழ் பெதிர்வும்" (நன். 144) என்று குறிப்பிடும் அளவிற்குக் காலப்போக்கில் எதிர்காலத்-

திலும் வழங்கத் தலைப்பட்டன. இனி, நிகழ்கால இடைநிலைகளை ஆய்வோம்.

ஆநின்று

சுரநனி வாரா நின்றனள் (ஐங். 397), இறை இறவா நின்றவளை (திருக்குறள், 1157) என்ற எடுத்துக்காட்டுக்களில் முதன்முதல் 'ஆநின்று' நிகழ்கால இடைநிலை அமைவது போலத் தோன்றுகின்றது. 'வாரா', 'இறவா' என்னும் வடிவங்களை 'செய்யா' வாய்பாட்டு வினைஎச்சம் எனக் கொள்ளுதல் இயலும். வினையெச்ச வாய்பாடுகளைத் தொகுத்துக் கூறும் வினையியலில் 'செய்யா' என்னும் வினையெச்சத்தைத் தொல்காப்பியனார் கூறுவிட்டாலும் எழுத்ததிகாரத்தில் 'செய்யாவென்னும் வினையெஞ்சு கிளவியும் அவ்வியல் திரியா தென்மனார் புலவர்' (தொ. எ. 240) என்று குறிப்பிடுவது அறிதற்பாற்று. நின்றாள், நின்ற என்னும் சொற்கள் 'செய்யா' என்னும் வாய்ப்பாட்டு யெச்சம் தழுவி நிற்கும் வினைகளாகும். இவற்றுள் இறந்தகால இடைநிலையே காணப்படுகின்றது. 'செய்யா' என்னும் வினையெச்சம் 'செய்து' என்னும் பொருளில் இறந்த காலத்தையே உணர்த்தி நிற்கும் என்பது உரையாசிரியர் கருத்து. அங்ஙனமாயின், ஆநின்று பிற்காலத்தில் நிகழ்காலம் உணர்த்துதல் எவ்வாறு? தழுவப்படும் வினையில் உள்ள 'நில்' என்னும் அடி தொடக்க நிலையில் நிகழ்ச்சித் தொடர்ச்சியை உணர்த்திப் பின்னர் செயல் நிலையில் நிகழ்ச்சியைக் குறித்திருக்கலாம் என்று கருத இடமுண்டு.

'செய்யா நின்றான்' என்னும் வடிவத்தை டாக்டர் கால்டுவெல் பின்வருமாறு பிரித்துக் காண்கின்றார்,[5]

செய் ஆகி நின்றான் > செய் ஆயி நின்றான் > செய்யாய் நின்றான் > செய்யா நின்றான். 'ஆகி' என்பதே செயல் நிகழ்ச்சியைக் குறிக்கின்றது என்கின்றார். அங்ஙனமாயினும், இறந்த

5. கால்டுவெல், இராபர்ட், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், 1961, ப. 492.

கால வடிவங்களையே வேறுபட்ட வகையில் அமைத்து நிகழ்-காலத்தை உணர்த்தினர் என்பது தெளிவு.

காலப்போக்கில் 'செய்யா நின்றான்' என்ற நிகழ்கால வடிவே நிகழ்காலத்திலேயே நுண்மையான வேறுபாடுகளைப் புலப்படுத்தும் வகையில் சிறு வேறுபாட்டுடன் வழங்கலா-யிற்று.[6]

எ-டு. உண்ணாநின்றான் — நிகழ்வில் இறப்பு
உண்ணாநிற்கிறான் — நிகழ்வில் நிகழ்வு
உண்ணாநிற்பான் — நிகழ்வில் எதிர்வு

உரையாசிரியர்கள் வழக்கத்தைக் குறிக்க நிகழ்காலத்தில் 'கூறாநிற்பர்' என்ற தொடரைப் பயன்படுத்துவது இவண் நோக்கத்தக்கது.

கின்று, கிறு

கிரால், குண்டர்ட், கால்டுவெல், மேர்வர்ட் ஆகிய அறிஞர்கள் 'கின்று' என்ற இடைநிலையை கு + இன்று என்று பகுத்து, 'கு' வரையறையற்ற எதிர்காலத்தையும் (aoristic future). இன்று இப்பொழுது என்னும் பொருளையும் குறித்து நிற்கின்றன என்று கருதுகின்றனர்[7].

செய் —கு— ஏன் = செய்கேன் என எதிர்மறையிலும், செய் —கு— இன்று – ஏன் = செய்கின்றேன் நிகழ்கால உடன்பாட்டி-லும் அமைகின்ற வினைவடிவங்களை ஆய்ந்தால் 'இன்று' என்ற சொல்லே நிகழ்காலத்தைக் குறிக்கின்றது என்பது போதரும் என்பர்.

'கிறு' என்பது மூக்கின ஒலியன் 'னகரம்' இழந்த வடிவ-மாகும்.

---

6. சூரிய நாராயண சாஸ்திரியார், வி. கோ., தமிழ் மொழி வரலாறு, 1958, ப. 97
7. Graul, K., Outline of Tamil Grammar, 1855.

யூலி பிளாக்கு, டட்டில் போன்ற மொழியியல் அறிஞர்கள் திராவிட மொழிகளில் துணைவினைகளின் வாயிலாகவே நிகழ்காலம் உணர்த்தப்படுகின்றது என்பர்.[8] தெலுங்கில் நிகழ்காலம் 'உந்ந்'-ம், தமிழில் கிற் < —கில்— ம் உணர்த்துகின்றது என்றும் கூறித் தெளிவுபடுத்துகின்றனர். தமிழ்ப்பேரகராதியில் 'கில்' ஆற்றலுணர்த்தும் இடை நிலை எனக்குறிக்கப்படுவதும் நோக்கத்தக்கது.[9]

ஆன்ட்ரோனோ 'கின்று' என்னும் இடை நிலையை 'கு—இல்—த்' எனப் பகுக்கலாம் என்று கருதுகின்றார்.[10] அவர் 'இல்' தொடக்க நிலையில் உடன்பாட்டுப் பொருள் உடையதாக இருந்தது என்றும், அது 'இர்' (இருத்தல்) என்ற பொருள் உடையது என்றும் கூறுகின்றார். எனவே அவர் கருத்துப்படி 'இருத்தல்' என்று பொருள்பெற்ற 'இல் > இர்' என்ற வடிவமே நிகழ்காலம் உணர்த்துகின்றது.[11]

ஆய்ந்து பார்க்குங்கால் கின்று, கிறு ஆகிய இடைநிலைகளை கில்—த் என்று பிரிப்பதே மிகப்பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. 'கில்' தமிழ்ப் பேரகராதியின்படி ஆற்றலுணர்த்தும் சொல். 'கிற்பன் கில்லேன்' (திவ், திருவாய் 3,2,6)

---

8. Bloch, J., Structure Grammaticale des Langues Dravidiennes, 1946, p. 59.

   Tuttle, E.H. Review of K. Ramakrishnaiah's "Studies in Dravidian Philology', JAOS, p. 57. 115

9. 'வெம்ப வருகிற்பதன்று கூற்றம் நம்மேல்' (தேவாரம் 1229, 2).

10. Andronov, M., Hints Regarding the Origin of Present tense Suffix "Kinr" in Tamil, Tamil Culture, 1961, pp. 145 — 150

    Zvelebil, K; Glasov, Yu; Andronov, M — Introduction to the Historical Grammar of the Tamil Language, 1969, pp. 100&152.

11. al and il are two independent roots from which both positive and negative froms can be derived.

என்னும் திவ்யப்பிரபந்த வழக்கும் இதனை உறுதிப்படுத்து-கின்றது. நிகழ்கால வினைகளில் 'கில்' என்னும் ஆற்றலுணர்த்-தும் சொல் வினையைக் காட்சிப் பொருளாகக் காட்டும் ஆற்றலை அளித்து நிகழ்ச்சி நிலைக்கு கொண்டுவந்துவிடுகிறது. இங்கும் இறந்தகால இடைநிலை 'த்' காணப்படுதல் முன்னர்க் கூறப்-பட்ட கருத்தை வலியுறுத்தி நிற்கின்றது.

இறப்பும் நிகழ்வும்

இறந்த காலத்தையும் எதிர் காலத்தையும் பல ஆண்டுக் கணக்கில் அளவிட்டுக் கூறலாம். ஆனால் நிகழ்காலமோ மிகக் குறுகிய வரையறைக்குட்பட்ட நிகழ் பொழுது. ஒரு நொடி முந்தினால் இறப்பு, ஒரு நொடி பிந்தினால் எதிர்வு. செயல் நிகழும் வரையறைக்குட்பட்ட இச்சிறு பொழுதைக் குறிக்க இறந்த கால வினைகளையே பயன்படுத்துதல் பொருத்தமானது. இறந்தகாலச் செயலை நிகழ்பொழுது வரை நீட்டிப்பின் நிகழ்-காலச் செயலாகின்றது. அச்செயல் நிகழ்ந்துவிடவே மீண்டும் இறந்தகாலத்தின்பாற்பட்டு விடுகின்றது. இறந்தகால வினை-யில் செயல் கருத்துப்பொருளாகவும் நிகழ்கால வினையில் நிகழும் ஆற்றல் உணர்த்தும் காட்சிப் பொருளாகவும் அமை-கின்றது.

இவற்றினின்று தமிழில் இறந்தகால வினைகளினின்றே நிகழ்கால வினைமுற்றுக்கள் வளர்ச்சியடைந்திருக்கலாம் என்-பது தெளிவாகின்றது. நிகழ்கால வினைவடிவங்களைப் பகுத்துக் கண்டால் அவற்றில் இறந்தகால இடைநிலை அமைந்திருத்-தலும் நிகழ்காலத்தைக் குறிக்க 'நில்', 'கில்' ஆகிய துணை-வினைகள் அமைந்துள்ளமை அறிதற்கியலும். 'நில்', 'கில்' ஆகிய இத்துணைவினைகள், வினைகள் தொடர்ந்து நிகழ்பொழுது வரை நிகழ்ந்து கொண்டிருக்கும் இயல்பைப் புலப்படுத்து-கின்றன.

இக்காலம்

நிகழ்காலம் இற்றை மொழியில் பல நுண்மையான வேறுபாடுகளைப் புலப்படுத்தும் வகையில் பல பாகுபாடு

களுடன் வழங்குகின்றது. இதற்கு ஆங்கில மொழித் தொடர்பும், வளர்ந்து வரும் கருத்துக்களை மொழியில் வெளியிடுவதற்கு எடுத்துக்கொண்ட முயற்சியுமே காரணமாகும். நிகழ்காலத்தின் பல நுண்ணிய வேறுபாடுகளும் துணைவினைகளின் துணையாலேயே உணர்த்தப்படுகின்றன.[12]

இலக்கண நூலில் அமைந்த வடிவங்கள்

| | | |
|---|---|---|
| கிறு | செய்கிறான் | செய்-கில்-த்-ஆன் |
| கின்று | செய்கின்றான் | செய்-கில்-த்-ஆன் |
| ஆநின்று | செய்யா நின்றான் | செய்யா-நில்-த்-ஆன் |

பேச்சு எழுத்து வழக்கில் அமைந்துள்ள வேறுபாடுகள்

| வேறுபாடு | வினைச்சொல் | துணைவினை |
|---|---|---|
| நிகழ்வு-தொடர்ச்சி | செய்துகொண்டிருக்கிறான் | கொண்டுஇரு |
| ,, | செய்யா நிற்கிறான் | நில் |
| நிகழ்வு-வழக்கம் | செய்து வருகிறான் | வா |
| நிகழ்வு-நிறைவு | செய்திருக்கிறான் | இரு |
| நிகழ்வு-பொதுமை வழக்கு | செய்யாநிற்பர் | நில் |

12. இசரயேல், மோ., துணைவினைகள், தென்மொழி, 1966, பக். 65—70.

# அலங்கடையும் இலங்கடையும்

பண்டைத் தமிழில் இன்றும் எளிதில் விளங்கிக் கொள்ள இயலாத சில அருகிய சொல் வழக்குகள் காணப்படுகின்றன. இலக்கியங்களில் அவற்றின் வழக்குகள் வாயிலாகவோ, அன்றேல் இலக்கண நூற்கள் வாயிலாகவோ அவற்றின் உண்மை நிலையை அறிந்து கொள்ளுதல் அரிதாகவே உள்ளது. இலக்கண நூற்களின் உரையாசிரியர்களும் கூட அவற்றை விளக்கிக் கூறுவதில் இடர்ப்படுகின்றனர்; அன்றேல் விளக்காது விட்டுவிடுகின்றனர். அத்தகைய சொல் வழக்குகளில் இவண் அலங்கடை, இலங்கடை ஆகிய இரண்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

அலங்கடை என்னும் சொல் தொல்காப்பியத்தில் பதினேழு இடங்களிலும், குறுந்தொகையில் ஓர் இடத்திலும் ஆளப்பட்டுள்ளது[1]. இலங்கடை குறுந்தொகையில் ஓர் இடத்திலும், நற்றிணையில் ஓர் இடத்திலும் காணப்படுகின்றது[2].

---

1. தொ. எ. 1 எழுத்தெனப் படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங்கடையே
தொ. எ. 30 மெய்ந்நிலை சுட்டின் எல்லா வெழுத்தும்
தம்முன் தாம்வருஉம் ரழ அலங்கடையே
தொ. எ. 62 சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஇஒள எனும் மூன்றலங் கடையே
தொ. எ. 72 ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே
தொ. எ. 423 ஒன்றுமுத லாக எட்ட னிறுதி
எல்லா எண்ணும் பத்தன் முன்வரின்

தொல்காப்பியனுர் அலங்கடை என்ற சொல்லை ஒன்றலங்கடையே, இரண்டலங்கடையே, மூன்றலங்கடையே, எழுத்தலங்கடையே, பெயரலங்கடையே, அவையலங்கடையே, நாயலங்கடையே, மயிலலங்கடையே எனப் பெயர்ச் சொற்களை ஒட்டி நூற்பாக்களின் இறுதியில் ஆண்டுள்ளார். சங்கப்புலவரும் இலங்கடை என்ற சொல்லை 'அன்பிலங்கடையே' என்பது போன்ற தொடர்களில் பெயர்ச்சொல்லை ஒட்டி செய்யுட்களின் ஈற்றிலேயே ஆண்டுள்ளனர். எனவே, இலக்கண நூற்பாக்களிலாயினுஞ் சரி அல்லது சங்கப் பாடல்களிலாயினும் சரி இறுதியில் பெயர்ச் சொற்களை ஒட்டி இச்சொற்கள் ஆளப்படுதலே இயல்பாகக் காணப்படுகின்றது. மேலும் எல்லா இடங்களிலும் இவ்வழக்குகள் ஏகாரத்துடனேயே முடிதல் அறியத் தக்கது. இந்த ஏகாரம் ஈற்றசை ஏகாரமாகும் எனலாம்.

---

குற்றிய லுகரம் மெய்யோடும் கெடுமே
முற்றஇன் வரூஉம் இரண்டலங் கடையே

தொ. சொ. 61 கண்ணுந் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக்கு இயலும் எழுத்தலங்
கடையே

தொ. சொ. 70 பெயர்நிலைக் கிளவி காலந் தோன்ரு
தொழில்நிலை யொட்டும் ஒன்றலங்
கடையே

தொ. சொ. 197 திணையொடு பழகிய பெயரலங் கடையே

தொ. சொ. 178 தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்தல்
எத்திறத் தானும் கிழத்திக் கில்லை
முற்பட வகுத்த இரண்டலங் கடையே

தொ. பொ. 197 பால்கெழு கிளவி நால்வர்க்கும்
உரித்தே
நட்பின் நடக்கை யாங்கலங் கடையே

தொ. பொ. 231 தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்
மெய்ம்மை யாக அவர்வயி
னுணர்ந்தும்
தலைத்தாம் கழறல்தம் எதிர்ப்பொழு
தின்றே

அலங்கடை என்னும் சொல் 'அல்லாத விடத்து' என்னும் பொருளிலும் இலங்கடை என்னும் சொல் 'இல்லாத விடத்து' என்னும் பொருளிலும் பண்டை மொழியில் ஆளப்பட்டுள்ளன.

தனிச்சொல்லா? அன்று?

இவை வழக்கில் தனிச்சொல் போலவே அமைகின்றன. எனினும் அலங்கடை அலம்+கடை எனவும், இலங்கடை இலம்+கடை எனவும் பிரித்துக்கொள்ள இடந்தருகின்றன. பின்வரும் சொல் வழக்குகளோடு இவற்றை ஒப்பிட்டுப் பார்ப்போம்.

அலந்தலை நெமை (அகம். 111) அலம் – தலை
அலந்தலை வேலம் (பதி. 39:12) அலம் – தலை

---

மலிதலும் ஊடலும் அவையலங்-
கடையே
தொ. பொ. 256 .................
.............. ...
அவையும் உளவே அவையலங்-
கடையே
தொ. பொ. 265 அவையும் உளவே அவையலங் கடையே
தொ. பொ 309 அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே
நிரனிறுத் தமைத்தல் நிரனிறை
சுண்ணம்
வரன்முறை வந்த மூன்றலங் கடையே
தொ. சொ. 346 பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
ஒத்த நாலெழுத் தேற்றலங் கடையே
தொ. பொ. 555 பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை
கொள்ளுங் காலை நாயலங்கடையே
தொ. பொ. 593 சேவல் பெயர்க்கொடை சிறகொடு
சிவணும்
மாயிருந் தூவி மயிலலங் கடையே
குறுந்தொகை 339, 6, 7 குவளை யுண்கண் கலுழ
பசலை யாகா வூங்கலங் கடையே
2. குறுந்தொகை 93,3,4, அன்னையும் அத்தனும் அல்லரோ
தோழி
புலவியஃ தெவனோ அன்பிலங்-
கடையே
நற்றிணை 174, 10, 11 மல்லல் மார்பு மருதத்தனன்
புல்லுமற் றெவனோ அன்பிலங் கடையே

அலந்தலை உன்னம் (பதி. 23:1) அலம்--தலை

அலந்தலைமை(திவ்ய. பெரிய திரு. 4,4,3) அலம்-தலைமை

அலங்கோலம் (இரா. அயோ. 7) அலம்—கோலம்

இலம்பாடு (தொ. சொ, 360) இலம்—பாடு

இங்குக் கொடுக்கப்பட்ட சொல் வழக்குகளிலெல்லாம் 'அலம்' அல் என்னும் அடியினை உடையதாய் அன்மைப் பொருளிலும், 'இலம்' இல் என்னும் அடியினைப் பெற்று இன்மைப் பொருளிலும் அமைகின்றமையைக் காணலாம். அல் என்பது உள்ள நிலையின் தன்மையை மறுக்கும் எதிர்மறை அடி. இல் என்பது உண்மையை மறுக்கும் எதிர்மறை அடி. இன்னும் சில வழக்குகளையும் ஒப்பிடுவோம்.

| | |
|---|---|
| சுட்டுங்காலை | (தொ. சொ. 24) |
| நினையுங்காலை | (தொ. சொ. 54) |
| அல்லாக்காலை | (தொ. பொ. 449) |
| வகுத்தக்கால் | (கலி. 35) |
| வந்தக்கடை | (கலி. 22) |

தொடர்ந்து சில சொல் வழக்குகளைப் பார்ப்போம்.

| | |
|---|---|
| அல்லாக்கால் (கலி. 124) | இல்லாக்கால் (கலி. 124) |
| அல்பொருள் | இல்பொருள் |
| அவ்வழி | இல்வழி |
| அல்லாச்சார்பு | இல்லாப்பொருள் |

பின்வரும் இணையான வழக்குகள் ஒரே பொருள் உடையன என்பது தெளிவு

| | |
|---|---|
| இல்பொருள் | இல்லாப் பொருள் |
| அன் மொழி | அல்லா மொழி |
| அல்வழி | அல்லாவழி |

மேற்கொடுக்கப்பட்டுள்ள எல்லாச் சொல்வழக்குகளையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது பல உண்மைகள் புலப்படும். அல், அல்லா என்பன ஒரே பொருளுடையன. இல், இல்லா என்பன ஒரே பொருளுடையன. எனவே அல்லா, இல்லா என்னும் எதிர்மறைப் பெயரெச்சங்களில் விகுதி ஆகாரம் பொருளற்றதாகவே அமைகின்றது. அல், இல் என்னும் எதிர்மறை அடிகள் உண்ணு, ஓடா போன்ற பிற பெயரெச்சங்களின் ஒப்புமையாக்கத்தால் (analogy) அல்லா, இல்லா என வழங்கத் தலைப்பட்டன.

வேறுபடாப் பொருள், திரியா வேற்றுமை, சுட்டா மகன் என்னும் பெயரெச்சத் தொடர்களில் 'ஆ' எதிர்மறை விகுதியாக அமைய அல்லாச் சார்பு, இல்லாப் பொருள் என்பவற்றில் 'ஆ' பொருளற்றதாகவே அமைகின்றது.

அலங்கடை, இலங்கடை ஆகியவற்றை இல்லாக்காலை, அல்லாக்காலை, வந்தக்கடை, நினையுங்காலை முதலியவற்றோடு ஒப்பிட்டால் 'அம்' என்னும் பொருளற்ற வடிவம் அல், இல் என்னும் அடிகளோடு இணைந்து நின்று அல்லா, இல்லா என்பவற்றில் உள்ள ஆகாரத்திற்கு இணையாக அமைந்துள்ளது என்பது தெளிவாகும்.

எனவே அல், இல், அல்லா, இல்லா, அலம், இலம் என்னும் வடிவங்கள் பெயரெச்சங்களாகச் செயலாற்றுகின்றன. அவை தழுவி நிற்கும் கடை, கால் போன்றவை பெயர்ச் சொற்களாகக் கொள்ளத்தக்கவை. ஆயின், அலங்கடை, இலங்கடை என்பன அமைப்பில் பெயரெச்சத் தொடர்கள் எனக் கொள்ளுந் தன்மையன எனலாம்.

தொல்காப்பியனார் வினையியலில் ஒன்பது வகையான வினையெச்ச வாய்பாடுகளைக் கூறி, அவற்றை அடுத்து

பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்
அன்ன மரபிற் காலங் கண்ணிய

என்ன கிளவியும் அவற்றியல் பினவே
(தொ. சொ. 229)

என்று கூறுகின்றார். "பின், முன், கால், கடை, வழி, இடம் என்று சொல்லப்பட்டனவும் அந்த மரபிற் காலங் குறித்து வரும் எல்லாச் சொல்லும் வினையெச்ச இயல்பின" என்பது இதன் பொருள்.[3] இந்நூற்பாவின்கண் வினையெச்ச ஈறுகளே தொகுக்கப்பட்டுள்ளன என்பர் இலக்கண அறிஞர். இவை வினையெச்ச ஈறுகளாக வருதற்கு உரையாசிரியர்கள் இறந்த பின்னே (கலி. 15) வருமுன்னர் (குறள். 435), நாடுங்கால் (கலி. 16), வந்தக்கால் (கலி. 35), வந்தக்கடை (கலி. 32), விடுவழிச் சென்றாங்கு (கலி. 130), காழ்த்த விடத்து (குறள். 879) போன்ற எடுத்துக்காட்டுக்களைத் தருகின்றனர். இவ்வினையெச்ச ஈறுகளுள் 'கடை' என்பதும் ஒன்றாகக் கொள்ளப்படுதல் கவனித்தற்பாற்று. தரப்பட்ட எடுத்துக்காட்டுக்களில் வினையெச்சங்களின் அமைப்பை ஆயுங்கால் அவை யாவும் உள் அமைப்பில் பெயரெச்சத் தொடர்களாகவே காணப்படுகின்றன. தொல்காப்பியனார் தரும் வினையெச்ச ஈறுகளைத் தழுவி நிற்கின்ற எல்லாச் சொற்களையும் பெயரெச்சங்களாகக் கொள்ளுதல் பொருந்தும். அவை பெயர் எச்சங்களாகக் கொள்ளப்படின் அவற்றால் தழுவப்படும் பின், முன், கால், கடை போன்ற சொற்கள் பெயர்ச் சொற்களேயாகும்.[4]

வினையெச்ச ஈறுகளாகத் தொல்காப்பியனார் தருபவை அனைத்தும் காலங்கண்ணிய கிளவிகள் என்று அவரே குறிப்பிட்டுள்ளார். எனவே அவற்றைக் காலப்பெயர்கள் எனக் கருதலாம். வேற்றுமை உருபுகளை முழு அளவில் ஏற்று வழங்-

---

3. தெய்வச் சிலையார், தொல்காப்பியச் சொல்லதிகார உரை, 223.
4. மோ. இசரயேல், வினையடைப் பெயர்கள், தமிழ்ப்பொழில், துணர் 49 (1945), பக். 169-175.

கும் இயல்புடையதாயிருத்தல் போன்ற பெயர்ச் சொற்களின் இயல்புகள் முழுமையாக அவற்றில் காணப்படாவிடினும் பயன்வகையில் அவை பெயர்களாகவே அமைகின்றன என்பதில் ஐயமில்லை.

எ-டு.

| | |
|---|---|
| சென்றக்கால் | பெற்ற கல்வி |
| வந்தக்கடை | வந்த கலி |
| | வந்த பொழுது |

சென்றக்கால் வந்தக்கடை போன்றவை சொற்றொடர் அமைப்பில் பெயரெச்சத்தால் தழுவப்பட்ட பெயர் அமைந்தவை என்று கொள்வதற்கு ஓர் இடர்ப்பாடு காணப்படுகிறது. பெயரெச்சத்தின் முன் வல்லினம் வர மிகுவதில்லை[5]. ஆனால் சென்றக்கால்,வந்தக்கடை ஆகியவற்றில் வலி மிகுந்து காணப்படுகின்றது. எனவே, தொடக்க நிலையில் இருவேறு தனிச் சொற்களாக அமைந்து பெயரெச்சத் தொடர்களாக வழங்கினவை தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னரே இணைந்து ஒரு சொல்லாக அமைப்பிலும் பயன்வகையிலும் வழங்கத்தலைப்பட்டிருக்கலாம் என்று கொள்ளுதல் பொருந்தும். வினையெச்ச ஈறுகளாகக் கூறப்பட்டவை காலப்பொருள் குறிக்கின்றமையாலும் முழு அளவில் வேற்றுமை உருபை ஏற்றுச் செயலாற்றுமையாலும் இலக்கண நூலார் அவற்றைப் பெயர்களாகக் கொள்ளவில்லை என்று கருதுவதில் தவறில்லை.

அமைப்பில் அவற்றைப் பெயரெச்சத் தொடர்களாகக் கொண்டாலும், பயன்வகையில் அவை வினையெச்சங்களே. எனவேதான் வருமொழிகள் வினையெச்ச ஈறுகளாகத் தொல்காப்பியனாரால் கருதப்பட்டன.

---

5. தொ. எ. 210.

எனவே, அலங்கடை, இலங்கடை என்பவை பயன் வகையில் வத்தக்கடை, சென்றக்கால் போன்ற வினையெச்சங்களே, அல், இல் எனபன குறிப்புப் பெயரெச்ச அடிகள்; அல்லது குறைவினையடிகள். வினையெச்ச ஈறுகளில் ஒன்ருகத் தொல்காப்பியனுர் கொள்ளும் 'கடை' என்பதும் பெயர்ச்சொல்லே ஆகும். 'அம்' என்னும் பொருளற்ற வடிவம் ஒலிநயத்தின் பொருட்டு இடையில் அமைந்து, அலங்கடை இலங்கடை என்னும் பெயரெச்சத் தொடர்கள் அமைந்துள்ளன எனலாம்.

---

## ஆசிரியர் அகரவரிசை

இந்நூலின்கண் பயின்றுவந்துள்ள ஆசிரியர் பெயர்கள் அகரவரிசைப்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளன. எண்கள் பக்க எண்ணையும், அடுத்துவரும் புள்ளி பன்முறை பயின்று வருதலை-யும், அ. கு. என்பது அடிக்குறிப்பு என்பதையும் குறிக்கின்றன.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 25 | 15 | சான் றுகளாக | சான்ருக |
| 31 (அ.கு.) | 2 | செட்டியார் | ரெட்டியார் |
| 62 | 1 | ஒரேவிடங்களில் | ஒரோவிடங்க ளில் |
| 81 | 15 | குறுந்தாள் | குறுந்தா ள |
| 104 | 21 | ாலத்திலும் | காலத்திலும் |

ஆசிரியரின் 'The Treatment of Morphology in Tolkāppiyam' என்னும் நூல் பற்றி அறிஞர்களின் சில கருத்துக்கள்:

His treatise on 'The Treatment of Morphology in Tolkāppiyam' is to be recommended for its thorough knowledge of the subject, its clarity and common sense, and the general validity of the conclusions.—*T. Burrow, University of Oxford.*

As such, Dr. Israel's work is a valuable contribution to Tamil linguistics, following upon and superseding such works as P. Subrahmanya Sastris'. History of grammatical theories in Tamil (Madras, 1934). Wisely, he draws his material not only from Tolkāppiyam, but from texts that are traditionaly regarded as approximately as ancient, such as Puranāṉūru.—*J.R. Marr, University of London.*

As a work based upon original research, it represents a significant contribution to the study of Tamil Grammar. I am certain that this will not only be helpful for a better understanding of Tolkāppiyam itself but also for a greater appreciation of the ancient Tamil language in its historical perspective. This publication will be a valuable addition in the field of Tamil studies.—*Dr. M. Varadarajan.*

நூலின் பொருளமைப்பு அதனிலும் சிறப்பாக உள்ளமை அறிந்து பெரிதும் மகிழ்கின்றேன். மொழியியலிலும், இலக்கணத்திலும் தங்களுக்குள்ள நிறைந்த புலமையை இந்நூல் இனிது எடுத்துக்காட்டுவதாகும். பழைய அமிழ்தினைப் புதிய பொற்கிண்ணத்தில் தரும் ஆற்றல் தங்களுக்குப் பெரிதும் உரியதாகும். பலப்பல நூல்களைப் பயின்று இவ்வரிய ஆராய்ச்சி நூலை உருவாக்கியிருக்கிறீர்கள். தங்கள் உழைப்பின் உருவம் இந்நூல்.

தொல்காப்பியக் கருத்துக்களை இக்கால அறிஞர் அறிந்து மகிழ்தற்குச் சிறந்த வாய்ப்பினை அளித்துள்ளீர்கள். தொல்காப்பியத்தின் பிற பகுதிகளையும் இங்ஙனம் மொழியியற்கண் கொண்டு ஆய்ந்து வெளியிட்டுத் தமிழ்மொழிக்கும் தமிழ் நாட்டிற்கும் தொண்டு புரிய முன் வருவீர்கள் என்பது எனது உறுதியான நம்பிக்கை.




கு. ஆறுமுகன்,
தில்லிப் பல்கலைக்கழகம்.

